# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

தற்கால மக்களின் ஆன்மிக மறுமலர்ச்சிக்கு ஏற்ற வகையில் பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர், சுவாமி விவேகானந்தர் ஆகியோர் காட்டிய வழியில் மத உண்மைகளை இந்த மாதப் பத்திரிகை வெளியிட்டு வருகிறது.

சந்தா விவரம்

| | |
|---|---|
| வருட சந்தா | ரூ. 12 |
| ஆயுள் சந்தா | ரூ. 150 |
| தனிப் பிரதி | ரூ. 1-20 |

ஆயுள் சந்தாவை மொத்தமாகவோ, பகுதி பகுதியாகவோ, மாதம் ரூ. 15 ஆகவோ ஒரு வருடத்திற்குள் செலுத்தலாம்.

வருட சந்தாதாரர்களை ஆயுள் சந்தாதாரர்களாகப் பதிவு செய்து கொள்வதன் மூலம் பத்திரிகையின் வளர்ச்சிக்கு உதவி புரியக் கோருகிறோம். ஆயுள் சந்தா என்பது 35 ஆண்டுகளுக்குப் பத்திரிகை அனுப்பப்படும் என்பதை குறிக்கிறது.

வேண்டுகோள்

1. மக்களுக்கு உணவு உடை வழங்கி உடல் சம்பந்தமான தேவைகளைப் பூர்த்தி செய்வது மிகவும் நல்ல உதவி ஆகிறது. கல்வி, தொழில் முதலியவற்றைக் கற்பித்து ஜீவனோபாயத்திற்கு வழிவகுத்துத் தருவது அதனினும் மேலான சேவை ஆகிறது. ஆன்மிக சம்பந்தமான நூல்களைப் படித்தும் கேட்டும் ஆத்மசாதனங்களில் ஈடுபடச் செய்வது தலையாய கைங்கரியமாகிறது. தானங்களிலேயே மிகச் சிறந்த தானம் ஞானதானம் என்பது ஆன்றோர் கண்ட உண்மை.

வாசக அன்பர்கள் தங்களின் சந்தாவைச் செலுத்துவதுடன், மேலும் தமது நண்பர்கள் சிலரையும் சந்தாதாரர்களாகச் சேர்த்துத் தருவது ஒரு நல்ல தொண்டாகும். இந்தப் புனித மதத் தொண்டில் சிரத்தையுடன் ஈடுபடுவது நமக்கும் மற்றவர்களுக்கும் பெருநலன் தரும்.

2. அன்பர்கள் தங்களின் தெய்விகக் கைங்கரியமாக கல்வி ஸ்தாபனங்கள், சத்சங்கங்கள் முதலியவைகளுக்குப் பத்திரிகை போய்க்கொண்டிருக்கும்படி செய்யலாம். இது ஒவ்வொரு மாதமும் தாங்கள் அளிக்கும் மேலான நன்கொடையாகவும், தங்களை ஞாபகப்படுத்தும் சிறந்த வெகுமதியாகவும் அமையும்.

3. அன்பர்கள் தங்களால் இயன்ற ஒரு சிறிதளவிற்காகிலும் புதிய சந்தாதாரர்களைச் சேர்த்துத் தரும் விஷயத்தில் முயற்சி செய்வார்கள் என்று நம்புகிறோம். குறைந்தது மூன்று சந்தாதாரர்களையாவது சேர்த்துத் தருவது மிகப் பெரிய உபகாரமாக இருக்கும். இதன் மூலம் இன்றைய சமுதாயத்தின் சூழ்நிலையில் நல்ல கருத்துகள் வளர அரும்பெரும் தொண்டு செய்தவர்களாகிறீர்கள்.

4. புதிய சந்தாதாரர்கள் பணம் அனுப்பி வைக்கும்போது புதிய சந்தா என்று குறிப்பிட்டு எழுதும்படி கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள். பழைய சந்தாதாரர்கள் தமது கடிதப் போக்குவரத்துகள் எல்லாவற்றிலும் சந்தா எண்ணையும் முழு விலாசத்தையும் அவசியம் குறிப்பிட்டு எழுத வேண்டுகிறோம்.




தொலைபேசி : 71231

விவரங்களுக்கு:

ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம் காரியாலயம்
ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்
மயிலாப்பூர் : சென்னை-600 004

## ஒரு முக்கிய வேண்டுகோள்

அன்புள்ளம் கொண்ட வாசகருக்கு,

கடவுளின் கிருபையை முன்னிட்டு எழுதுவது. வணக்கம். ஸ்ரீராமகிருஷ்ண விஜயம் பத்திரிகையைப் பலரும் படித்துப் பயன்பெறச் செய்வது ஒரு நல்ல தெய்விகத் தொண்டாகும்.

அன்பர்கள் தங்கள் ஊரிலுள்ள வாசகசாலைகள், நூலகங்கள், உயர்நிலைப் பள்ளிகள், படிப்பகங்கள், சங்கங்கள் ஆகியவற்றை அணுகி அங்கெல்லாம் ஸ்ரீராம கிருஷ்ண விஜயம் வரவழைப்பதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யக் கோரு கிறோம். அல்லது ஆர்வம் உள்ள அன்பர்களைக் கொண்டு அவற்றுக்காகச் சந்தாத் தொகையைக் கட்டச் செய்யலாம்.

உங்கள் ஊரிலுள்ள உயர்நிலைப் பள்ளிகளுக்கு, நீங்கள் படித்த உயர்நிலைப் பள்ளிக்கு, உங்கள் ஊரிலுள்ள பொதுநூலகத்திற்கு ஸ்ரீராமகிருஷ்ண விஜயம் அனுப்புவதற்குத் தாங்கள் சந்தா செலுத்தலாம். தங்கள் நன்கொடையாக அமை யும் அதன்மூலம் பலரும் விஜயத்தைப் படிக்கும் வாய்ப்பு ஏற்படும்.

விஜயத்திற்குத் தனிப் பிரதி விற்பனை மிகவும் குறைவு. எனவே தங்கள் நண்பர்கள், உறவினர்கள் ஆகியோரின் மூலம் தங்கள் ஊரில் தங்கள் முயற்சியினால் குறைந்தது 20 புதிய சந்தாதாரர்களைச் சேர்த்துக் கொடுக்கும்படி கேட்டுக் கொள்கிறோம்.

விருப்பமுள்ள அன்பர்கள், சத்சங்கங்களுக்கும் பொது நூலகங்களுக்கும் விஜயம் பத்திரிகையை அனுப்புவதற்குத் தாங்களே பணம் செலுத்தலாம். உதார ணமாக, ஒருவர் ரூ. 120 அனுப்பினால் 10 சத்சங்கங்களுக்கு ஒரு வருடத்திற்கு விஜயம் அனுப்பப்படும். அவ்விதம் பத்திரிகை அனுப்பப்படும் சத்சங்கங்களின் முகவரிகள் பணம் அனுப்பியவருக்குத் தெரிவிக்கப்படும். அல்லது தாங்களே பத்தி ரிகை அனுப்ப வேண்டிய முகவரிகளைக் குறிப்பிட்டும் பணம் அனுப்பலாம்.

இதுபோன்று தாங்கள் வசிக்கும் மாவட்டத்தில் அல்லது தாலூக்காவில் உள்ள பொது நூலகங்களுக்கும் உயர்நிலைப் பள்ளிகளுக்கும் தங்கள் நன்கொடையாக விஜயம் பத்திரிகையைத் தாங்கள் அனுப்பலாம்.

விஜயம் சந்தாதாரர்களை அதிகப்படுத்தும் தெய்வப் பணியில் எங்களால் இயன்ற முயற்சிகளைச் செய்து வருகிறோம். இது சம்பந்தமான எங்களின் இந்த வேண்டுகோளை, பெரியோர்கள் தங்களுக்கு ஏதோ சம்பந்தமில்லாதது என்று புறக்கணிக்காமல், மேலும் சந்தாதாரர்களைச் சேர்த்துத் தரும் விஷயத்தில் தங்க ளால் இயன்ற எல்லா முயற்சிகளையும் ஊக்கத்துடன் அவசியம் மேற்கொள்ள வேண்டுகிறோம்.

நிர்வாகி

**ஸ்ரீராமகிருஷ்ண விஜயம் காரியாலயம்**

ஸ்ரீராமகிருஷ்ண மடம், சென்னை-600 004

# ஸ்ரீராமகிருஷ்ண விஜயம்

தொகுதி 63 | பிப்ரவரி—1983 | இதழ் 2

## பொருளடக்கம்

## மூன்று நாள் அந்தர்யோகம்

பகவான் ஸ்ரீராமகிருஷ்ணரின் 148–ஆவது ஜயந்தி விழா 1983 மார்ச் 16–ஆம் நாள் புதன்கிழமை வழக்கம் போல் விமரிசையாக, சென்னை, ஸ்ரீராமகிருஷ்ண மடத்தில் நடைபெறும்.

மார்ச் 18 முதல் 20 தேதி வரை மயிலாப்பூர் ஸ்ரீராமகிருஷ்ண மடத்தில் அந்தர்யோகமும், பகவான் ஸ்ரீராமகிருஷ்ண ஜயந்தியின் சிறப்பு விழா நிகழ்ச்சிகளும் நடைபெறும். மூன்று நாள் அந்தர் யோகத்தில் கலந்துகொள்ள விரும்பும் அன்பர்கள் 'மேனேஜர், ஸ்ரீராமகிருஷ்ண மடம், சென்னை–600 004' என்ற முகவரிக்கு முன்னதாகவே கடிதம் எழுதித் தங்கள் பெயரைப் பதிவு செய்து கொள்ளவும்.

## சந்தாதாரர்கள் கவனிக்க

* சந்தா எண் 30,001 முதல் 30,644 வரையிலும் உள்ள அன்பர்களின் சந்தாத் தொகை பிப்ரவரி மாதத்துடன் முடிவடைகிறது. மேற்கொண்டு பத்திரிகையைத் தொடர்ந்து அனுப்ப, அடுத்த ஆண்டுச் சந்தாத் தொகை ரூ. 12ஐ பிப்ரவரி 25-ஆம் தேதிக்குள் அனுப்பி வைக்குமாறு கேட்டுக்கொள்ளுகிறோம்.

* சந்தா எண் 40,001 முதல் 40,281 வரையிலும் உள்ள அன்பர்களின் சந்தாத் தொகை மார்ச் மாதத்துடன் முடிவடைகிறது.

* சந்தா எண் 50,000 முதல் 50,208 வரையிலும் உள்ள அன்பர்களின் சந்தாத் தொகை ஏப்ரல் மாதத்துடன் முடிவடைகிறது.

* சந்தா எண் 60,000 முதல் 60,344 வரையிலும் உள்ள அன்பர்களின் சந்தாத் தொகை மே மாதத்துடன் முடிவடைகிறது.

சந்தாவைக் கூடிய விரைவில் முன்னதாவே செலுத்துவதனால் பல சங்கடங்களையும் குழப்பங்களையும் தவிர்க்க முடிகிறது.

ஆயுள் சந்தாதாரராகத் தங்களைப் பதிவு செய்துகொள்ள விரும்பும் ஆண்டுச் சந்தாதாரர்கள், தாங்கள் செலுத்தியுள்ள ரூ. 12 போக மீதி ரூ. 138–யைச் செலுத்தி ஆயுள் சந்தாதாரராகத் தங்களைப் பதிவு செய்துகொள்ளலாம். தொகையை மொத்த மாகவோ, பகுதி பகுதியாகவோ ஒரு வருடத்தில் செலுத்தலாம். ஆயுள் சந்தாதாரராகச் சேருவது பத்திரிகையின் வளர்ச்சிக்குப் பெரிதும் உதவி செய்வதாகும்.

நிர்வாகி,
**ஸ்ரீராமகிருஷ்ண விஜயம்**




# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்
நன்றே நினைமின் நமன் இல்லை.
—திருமூலர்

| தொகுதி 63 | துந்துபி ஞு மாசி மீ | இதழ் 2 |
| --- | --- | --- |






संसाराब्धिनिमग्नाज्ञनिकरप्रोज्जिहीर्षया ।
कृतसंहननं वन्दे शङ्करं लोकशङ्करम् ॥

ஸம்ஸாராப்தி-நிமக்நாஜ்ஞ-நிகர-ப்ரோஜ்ஜிஹீர்ஷயா ।
க்ருத-ஸம்ஹநநம் வந்தே சங்கரம் லோக-சங்கரம் ॥

சம்சாரம் என்ற கடலில் மூழ்கியுள்ளவர்களைக் கரையேற்றும் நோக்கத்துடன் கூடியவரும், அதையே செய்து உலகிற்கு நன்மையை உண்டுபண்ணியவருமான ஸ்ரீஆதிசங்கரரை நமஸ்கரிக்கிறேன்.

ஒருவனே போற்றி ஒப்பில்
அப்பனே போற்றி வானோர்
குருவனே போற்றி எங்கள்
கோமளக் கொழுந்தே போற்றி
வருகவென் றென்னை நின்பால்
வாங்கிட வேண்டும் போற்றி
தருகநின் பாதம் போற்றி
தமியனேன் தனிமை தீர்த்தே.
—திருவாசகம்



# ஸ்ரீ ராமகிருஷ்ணரின் அருள்வாக்கு

வெள்ளி, செப்டம்பர் 26, 1884

**ஸ்ரீராமகிருஷ்ணர்:** சிலரிடம் பாம்பின் சுபாவம் இருக்கிறது. முன்னெச்சரிக்கை எதுவுமே இல்லாமல் திடீரென்று அவர்கள் உங்களைக் கடித்துவிடுவார்கள். நீங்கள் அந்தக் கடியிலிருந்து தப்ப வேண்டுமானால் வெகு தூரம் விவேகத்தால் ஆராய்ச்சி செய்து சாதுரியமாக நடந்து கொள்ள வேண்டும். அப்படிச் செய்யாவிட்டால், அளவு கடந்த கோபம் உங்களுக்கு ஏற்பட்டு,பதிலுக்குத் தீங்கு செய்யும் நிலைக்கும் வந்துவிடுவீர்கள். இவ்விதம் அசம்பாவிதம் எதுவும் நேராமல் இருப்பதற்கு, சத்சங்கம் மிகவும் முக்கியம். ஆகவே தான் இடையிடையே சாதுவோடு சத்சங்கம் செய்வது பெரிதும் அவசியமாகும். சத்சங்கத்தின் விளைவாக, நித்தியம் அநித்தியம் ஆகிய இரண்டிற்கும் உள்ள வேறுபாட்டை உணர்ந்துகொள்ளும் திறமை ஒருவனுக்கு ஏற்படுகிறது.

**விஜயர்:** ஐயனே! எனக்கு ஓய்வு நேரமே கிடைப்பதில்லை. இங்குள்ள என் கடமைகளில் நான் சரியாகச் சிக்கிக்கொண்டிருக்கிறேன்.

**ஸ்ரீராமகிருஷ்ணர்:** நீங்கள் மதபோதகராக இருக்கிறீர்கள். மற்றவர்களுக்கு விடுமுறை நாட்கள் உண்டு; ஆனால் சமயபோதகருக்கோ விடுமுறை நாள் என்பதே கிடையாது. ஒரு ஜமீன்தார் தனக்குச் சொந்தமான பெரிய ஜமீனை மேற்பார்வையிட்டு நிர்வாகம் செய்வதற்கு மேலாளர் ஒருவரை நியமிக்கிறார். அந்த மேலாளர் ஜமீனைச் சேர்ந்த ஒரு பகுதியில் சண்டை சச்சரவை அடக்கி, சமாதானம் நிலவச் செய்கிறார். அப்படி அந்தப் பகுதியில் மேலாளர் ஒழுங்கை ஏற்படுத்தியதும், ஜமீன்தார் உடனே அந்த மேலாளரை இன்னொரு பகுதியில் சண்டை சச்சரவை அடக்குவதற்கு அனுப்பி வைக்கிறார். அதுபோல, உங்களுக்கும் ஓய்வு என்பது இல்லை. (எல்லோரும் சிரித்தனர்.)

**விஜயர்** (கைகூப்பிக்கொண்டு): தேவரீர் அடியேனை ஆசீர்வதியுங்கள்.

**ஸ்ரீராமகிருஷ்ணர்:** இப்பொழுது நீங்கள் ஓர் அறிவிலி போலப் பேசுகிறீர்களே! பகவான் ஒருவரே ஆசீர்வதிப்பவர்.

**விஜயர்:** சுவாமி, எங்களுக்கு ஏதேனும் கொஞ்சம் போதனை அருளுங்கள்.

**ஸ்ரீராமகிருஷ்ணர்** (பிரம்ம சமாஜ ஆலயத்தின் மீது சுற்றிலும் தமது பார்வையைச் செலுத்திக்கொண்டே புன்சிரிப்புடன்): இதுவும் [பிரம்ம சமாஜத்தில் யோகமும் போகமும் இணைந்திருக்கின்றன என்று பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர் இங்கே குறிப்பிடுகிறார்.] ஒரு விதத்தில் நல்லது தான்! கற்கண்டும் பாகும் சேர்ந்திருப்பது போல இது இருக்கிறது. இங்கே கற்கண்டும் இருக்கிறது, பாகும் இருக்கிறது. (எல்லோரும் சிரித்தல்.)

நக்ஸ் என்ற ஒரு விதச் சீட்டாட்டத்தைப்பற்றி உங்களுக்குத் தெரியுமல்லவா? அந்த விளையாட்டின் விதிப்படி பதினேழுக்கும் குறைந்த புள்ளிகளைப் பெறுகிறவர்கள் மேலும் மேலும் விளையாடிக்கொண்டே இருக்கலாம். ஐந்து புள்ளி, ஏழு புள்ளி, பத்துப் புள்ளிகளைப் பெற்றுத் தொடர்ந்து விளையாடுபவர்கள் திறமைசாலிகள். நானோ பதினேழுக்கும் அதிகமான புள்ளிகளைப் பெற்றுவிட்டதனால் விளையாட்டிலிருந்து

விலகிக்கொண்டுவிட்டேன். இனி நான் விளையாட முடியாது. [இந்த உதாரணத்தின் மூலம், ஸ்ரீராமகிருஷ்ணர் உலக பந்த பாசங்களிலிருந்து தாம் விலகியிருப்பதை இங்கே குறிப்பிடுகிறார்.] (அனைவரும் சிரித்தனர்.)

ஒரு சமயம் கேசவசந்திர சேன் தமது வீட்டில் ஒரு சொற்பொழிவு நிகழ்த்தினர். அப்போது நான் அங்கே இருந்தேன். பல மக்கள் அங்கே குழுமியிருந்தார்கள். திரைக்குப் பின்னல் தாய்மார்களும் அமர்ந்திருந்தனர். கேசவர் தமது சொற்பொழிவின் போது, ''ஓ பகவானே! பக்தி என்ற நதியில் நாங்கள் மூழ்கி மறைந்து போகும்படி அருள் புரியுங்கள்!'' என்று குறிப்பிட்டார். அப்போது நான் கேசவரிடம் புன்சிரிப்புடன், ''பக்தி என்ற நதியில் நீங்கள் எல்லோரும் ஒரேயடியாக மூழ்கி மறைந்து போய்விட்டால், திரைக்குப் பின்னல் அமர்ந்திருப்பவர்களுடைய கதி என்ன ஆவது? ஆதலால் ஒரு காரியம் செய்யுங்கள். தங்கு தடையின்றிப் பக்தி நதியில் மூழ்குங்கள்; ஆனல் அதே சமயம் இடையிடையே மேலே எழுந்து கரைக்கு வாருங்கள். ஒரேயடியாக மட்டும் நதியிலேயே மூழ்கியிருந்து விடாதீர்கள்!'' என்று கூறினேன்.

நான் சொன்னதைக் கேட்டுக் கேசவரும் மற்றவர்களும் கொல்லென்று சிரித்தார்கள்.

கவலைப்பட வேண்டாம். ஒருவர் சிரத்தையுடையவராக மட்டும் இருப்பாரானல் இந்த உலக வாழ்க்கையிலும் பகவானைத் தரிசிக்க முடியும். 'நான்', 'எனது' என்ற இந்த மனப்பான்மைதான் அஞ்ஞானமாகும். அதற்கு மாருக, 'பகவானே! எல்லாம் நீயே, எல்லாம் உன்னுடையதே' என்று உணர்வது ஞானமாகும்.

உலகில் இருங்கள். ஆனல் பணக்கார வீட்டு வேலைக்காரியைப் போல உலகில் வாழ்ந்து வாருங்கள். அவள் வீட்டுவேலைகள் எல்லாவற்றையும் நன்ருகச் செய்கிருள். வீட்டு யஜமானனுடைய குழந்தையைக் கவனமாக வளர்க்கிருள். அந்தக் குழந்தையைப்பற்றிப் பேசும்போது, 'என்னுடைய ஹரி' என்று சொல்கிருள். எனினும் அவள் தன் அந்தரங்க உள்ளத்தில், 'இந்த வீடு எனக்குச் சொந்தமல்ல, இந்தக் குழந்தையும் என்னுடையதல்ல' என்பதை மிகவும் நன்ருக அறிந்திருக்கிருள். வீட்டு வேலைகள் எல்லாவற்றையும் அவள் மிகவும் நன்ருகவே செய்கிருள். ஆனல் அதே சமயத்தில் தனக்குச் சொந்தமான இடத்தைப் பற்றிய எண்ணம் அவள் உள்ளத்தில் பதிந்திருக்கிறது. அவளுடைய மனநிலையில் இருந்துகொண்டு நீங்கள் உங்களுடைய உலகக் காரியங்களைச் செய்து வாருங்கள். அதற்கிடையில் மனதைக் கடவுளைப் பற்றிய சிந்தனையில் நிலையாக வைத்திருங்கள். வீடு, வாசல், குடும்பம், குழந்தைகள் உங்களுக்குச் சொந்தமல்ல என்பதை அந்தரங்க உள்ளத்தில் உணர்ந்திருங்கள். 'இவை யாவும் கடவுளுக்கே சொந்தமானவை; நான் கடவுளின் வேலைக்காரன் (தாசன்) மட்டுமே' என்ற எண்ணத்துடன் உலகில் வாழ்ந்து வாருங்கள்.

நான் மக்களிடம், ''உள்ளத்தில் உலக ஆசைகளைத் துறந்துவிடுங்கள்'' என்றுதான் சொல்லுகிறேன். உலகத்தை விட்டுவிடும்படி நான் அவர்களிடம் சொல்வதில்லை. ஒருவர் பற்றற்று உலகில் வாழ்ந்து, மனப்பூர்வமான சிரத்தையோடு பகவானை நாடுவாரானல், அப்போது பகவானை அடையும் திறமையைப் பெறுவார்.

(விஜயரிடம்): என் கண்களை மூடிக்கொண்டு நானும் இறைவன் மீது தியானம் செய்து வந்த காலமும் உண்டு. [இது பிரம்ம சமாஜத்தவர்களின் தியான முறையைக் குறிப்பிடுகிறது.]

அதன் பிறகு எனக்கு மற்ருேர் எண்ணம் தோன்றியது. அப்போது எனக்கு நானே, ''கண்ணை மூடிக்கொண்டு நினைக்கும்போதுதான் பகவான் இருக்கிருரா? என் கண்களைத் திறந்துகொண்டு நாலா பக்கமும் பார்க்கும்போது அவர் இல்லையா?'' என்று சொல்லிக் கொள்வேன். இப்போதெல்லாம் நான் கண்ணைத் திறந்துகொண்டு எங்கும் சுற்றிப் பார்க்கும்போது, பகவான் எல்லா உயிர்களிடமும் வசிப்பதைக் காண்கிறேன். மனிதன், மிருகங்கள், வேறு உயிர்கள், மரங்கள், செடிகள், சூரியன், சந்திரன், நிலம் ஆகிய எல்லாவற்றிலும் அந்தர்யாமியாகப் பகவான் குடிகொண்டிருக்கிருர்.

சண்டி எனப்படும் தேவீ மாகாத்மியத்திலும், 'மிகவும் அழகு வாய்ந்தவர்களிடம் ஈசுவர சக்தி இருக்கிறது' என்று சொல்லப்பட்டிருக்கிறது.

ஃ




# சிவராத்திரி

மைதிலி வேணுகோபால்

பிறவாமல் வேண்டுமானல் இருக்கலாமே தவிர, பிறந்துவிட்டால் இறவாமல் எப்படி இருக்க முடியும்? தில்லையம்பலவாணரான சிவபெருமானின் திருவடித்தாமரைகளை மறவாதிருந்தால் இது சாத்தியம் என்கிருர் பட்டினத்தார்.

**பிறவாதிருக்க வரம்தரல் வேண்டும்,**
**பிறந்துவிட்டால்**
**இறவாதிருக்க மருந்துண்டு காண்;**
**இது எப்படியோ ?**
**அறமார் புகழ்த் தில்லை**
**அம்பலவாணர் அடிக்கமலம்**
**மறவாதிரு மனமே! அதுகாண்**
**நல்மருந்து உனக்கே.**

சிவராத்திரி என்ற சொல்லுக்கு, சிவனைப் பூஜை செய்ய வேண்டிய ராத்திரி என்று பொருள்.

### புராண வரலாறு

ஒரு சமயம், பார்வதி விளையாட்டுக்காகச் சிவபெருமானின் கண்களைப் பொத்தினுள். எங்கும் அந்தகாரம் சூழ்ந்தது. திக்குத் திசை புரியவில்லை. அத்துடன், அஞ்ஞான இருள், பிரபஞ்சத்தை மூடிக்கொண்டது. உடனே தேவர்கள் எல்லோரும் சிவனைப் பூஜை செய்தனர். அந்த ராத்திரியே சிவராத்திரியாகும்.

கரணங்கள் மனதிலே லயிக்க வேண்டும். மனம் ஜீவனில் லயிக்க வேண்டும். ஜீவன் ஆத்மாவிலே லயிக்கும் ராத்திரி தான் சிவராத்திரி. உலக விஷயசுகங்களில் ஈடுபட்டும், பொருளை ஈட்ட அலைந்து திரிந்தும், சக்தியை இழந்துவிட்ட ஜீவனுக்கு ஆத்ம சக்தியை ஏற்படுத்திக் கொடுக்கும் இரவுதான், சிவராத்திரி எனப்படுகிறது.

மிகவும் உயர்ந்த வைரக் கற்கள் இருக்கின்றன. வியாபாரிகள் அவற்றை எப்படி வைத்துக் காப்பாற்றுவார்கள் தெரியுமா? மெழுகில் ஒட்ட வைத்திருப்பார்கள், கற்கள் கீழே விழுந்துவிடும் என்பதற்காக. அதே போல, என்னதான் நம் மனம் வைரம் போல் இருந்தாலும், இந்த உலகிலுள்ள பலப் பல கவர்ச்சிகள் நம்மைக் கவர்ந்து தம்மை நோக்கி இழுத்துக் கொள்ளப் பார்க்கும். இறைவனுகிய மெழுகில் நன்ருக அழுத்தமாக ஒட்டிக் கொண்டுவிட்டோமானல் எந்தக் கவர்ச்சிக்கும் ஈடு கொடுத்துவிடலாம்.

சிருஷ்டிக்கு முன்பு தன்னிடம் லயித்ததைப் படைக்க விரும்பிப் பரமன் லிங்கமாய்த் தோன்றும் நாள்தான் சிவராத்திரியாகும்.

யோக சிவராத்திரி, நித்திய சிவராத்திரி, பக்ஷ சிவராத்திரி, மாத சிவராத்திரி, மகா சிவராத்திரி என்று சிவராத்திரி ஐவகைப்படும். சிவராத்திரியில் சிவனுக்கு அர்ச்சனை செய்து, ருத்திர பாராயணம் செய்ய வேண்டும். மகா சிவராத்திரி மிகவும் புனிதமானது. கோடி கோடிப் பிரம்மஹத்தி தோஷங்களையும் நசிக்கச்செய்யும் வல்லமை இதற்கு உண்டு என்பர்.

சிவராத்திரி விரதத்தை மிக்க ஆசார அனுஷ்டானங்களோடு தூய்மையாகச் செய்ய வேண்டும். சிவராத்திரிக்கு முந்திய தினமே இதற்கான புனிதச் சூழல் ஏற்பட்டு விடுகிறது. ஒரு வேளை மட்டுமே உண வருந்தி, சாணத்தினல் சுத்தி செய்த இடத்தில், மடியான வஸ்திரத்தை விரித்துப் படுத்து உறங்க வேண்டும். சிவராத்திரி

யன்று விடியற்காலே எழுந்து நீராடிச் சிவாலயம் சென்று தரிசிக்க வேண்டும். வீட்டில் பூஜையறையை நன்ருகப் புதிய பசுஞ் சாணத்தினுல் மெழுகி, மங்களமாய் முத்துப் போல் கோலமிட வேண்டும். பின்பு அவரவர் சக்திக்கு ஏற்ப விதானங்கள் அமைத்து, விக்கிரகங்கள் வைத்து, மேல் அலங்காரங்களேச் செய்யலாம். சிவபெருமானே ஆவாகனம் செய்ய வேண்டும். உபவாசம் இருக்க வேண்டும். உபவாசம் இருந்தால் உடலுக்கு நல்லது, ஆரோக்கியமாக இருக்கலாம் என்று வைத்திய சாஸ்திரம் கூறுகிறது. உபவாசம் இருந்தால் இறைவனுக்கு அருகில் செல்லுகிருேம், வசிக்கிருேம். அதனுல் ஆத்மாவுக்கு ஏற்றம் என்று பக்தி சாஸ்திரம் கூறுகிறது. எது எப்படியாயினும் அன்று முழுக்க உணவை மறந்து பகவானே நினேத்தல் வேண்டும்.

**நான்கு யாமங்களுக்கான பூஜைமுறைகள்:** நான்கு யாமங்களுக்கும் தனித் தனியாக நான்கு பூஜைமுறைகள் இருக்கின்றன. **முதல் யாமத்தில்** நீராடிவிட்டுப் பஞ்சகவ்யம் எனப்படும் பசும் பால், பசுந்தயிர், பசுநெய், பசுவின் கோமயம், பசுஞ்சாணி இவற்றைக் கலந்து அபிஷேகம் செய்ய வேண்டும். நல்ல பசுமையான வில்வதளங்களேச் சாத்தித் தாமரை மலர்களால் அர்ச்சனே செய்ய வேண்டும். பயற்றம் பருப்புச் சேர்த்துச் செய்த வெண்பொங்கலே நிவேதனம் செய்து, ரிக்வேதம் ஓத வேண்டும். இதனுல் தூய்மையான பிறவி கிடைக்கும்.

**இரண்டாம் யாமம்:** சுத்தமாகத் தயாரித்த பஞ்சாமிருதத்தினுல் அபிஷேகம் செய்ய வேண்டும். பச்சைக் கர்ப்பூரம், பன்னீர் இவற்றைச் சேர்த்து நாமே தூய்மையாக அரைத்த சந்தனத்தைச் சாத்தித் தாமரைமலர்களால் அலங்கரித்துத் துளசியால் அர்ச்சனே செய்ய வேண்டும். பால்பாயசம் நிவேதித்து யஜுர் வேதம் ஓதுகிருர்கள். மணத்துக்கு மணம் சேர்ப்பது போல, ஏற்கனவே கம்மென்று மணம் வீசும் சந்தனத்துடன் பரிமளங்களும் சேர்த்துத் துளசியாலும் அர்ச்சித்து, மணக்க மணக்கப் பால் பாயசத்தையும் நைவேத்தியம் செய்தால், புறச் சூழ்நிலே மணக்கிறது. ஆனுல், அது மட்டும் போதாதே! அகமும் மணக்க வேண்டும், சிவ சிந்தனேகளால். அதுதான் முக்கியம். சிவ ஸ்துதி, பஞ்சாக்ஷர ஸ்துதி என்று மனமும் இறைவனிடத்தே ஒன்றி மணக்க வேண்டும். உலக வசியம் ஏற்படும் என்று இதற்குப் பலன் சொல்லியிருக்கிறது.

**மூன்ரும் யாமம்:** நல்ல கொம்புத்தேனுல் அபிஷேகம் செய்ய வேண்டும். மல்லிகை, முல்லே மலர்களேச் சாத்த வேண்டும். சிவனுக்கு மிகப் பிரியமான வில்வதளத்தினுல் அர்ச்சனே செய்ய வேண்டும். எள் அன்னத்தை நிவேதனம் செய்தபின், ஸாம வேதம் ஓதுகின்றனர். இது கேட்பதற்கு மிகவும் இனிமையாக இருக்கும். இதனுல் நல்ல இனிமையான குரல் படைத்து, சங்கீதத்தில் உலகமே போற்றக்கூடிய அளவு விற்பன்னராகப் பிறவி கிடைக்கும்.

**நான்காம் யாமம்:** கருப்பஞ்சாற்றினுல் அபிஷேகம் செய்ய வேண்டும். நந்தியாவட்டைப் புஷ்பங்கள் சாத்தி, அல்லிமலரால் அர்ச்சனே செய்து, சுத்த அன்னத்தை நிவேதனம் செய்த பின் வணங்கி அதர்வ வேதம் ஓதுகின்றனர்.

சிவபெருமான் பொதுவாக அபிஷேகப் பிரியர் என்பதனுல், ஆண்டுக்கு ஒரு முறையேனும், சிவராத்திரி நன்னுளில் மேற்கூறிய படி அபிஷேகங்கள் அர்ச்சனேகள் செய்ய வேண்டும். பின்பு, மற்ற எல்லா உபசாரங்களும் செய்து, அர்க்கியம் கொடுத்து வணங்க வேண்டும். விடிந்ததும், புனிதமாய் நீராடி, அனுஷ்டானங்கள் செய்து, தானங்களேயும் அவரவர் சக்திக்கேற்பச் செய்து, பாரணே செய்ய வேண்டும். இவ்விதம் சிவராத்திரியைச் சிவனுக்கே உரிய ராத்திரியாக்கி, சிவ சிந்தனேகள், சிவ பூஜைகளிலேயே கழித்து, இருபத்துநான்கு ஆண்டுகள் தொடர்ந்து செய்தால், இவர்களது இருபத்தொரு தலேமுறையினரும் முக்தியடைவார்கள்.

பஞ்சாட்சரம் ஜபித்துச் சிவராத்திரியைக் கழிக்கலாம். பஞ்சாட்சரத்தின் பெருமை அளவிட முடியாதது.

இவ்வாறு சிவராத்திரியைத் தூய்மையாகக் கடைப்பிடித்துச் சிவனருளுக்குப் பாத்திரமாக வேண்டும். ஃ




## பாரதியின் ஆன்மிகச் சிந்தனைகள்

சுவாமி கமலாத்மானந்தர்

### கண்ணன் பாட்டு

பாரதியார் வேதாந்தி. உருவக் கடவுள் என்ற வகையில் அவருக்குத் தேவியிடமும் கண்ணனிடமும் அபரிமிதமான ஈடுபாடு இருந்தது.

பாரதியின் முப்பெரும் பாடல்களில் ஒன்றாகிய கண்ணன் பாட்டிலே, இறையுணர்வில் இணைந்த ஆன்ம வெளிப்பாட்டை மிகவும் அற்புதமாகப் படைத்து, பாரதியார் தமிழ்மொழிப் பக்தி இலக்கியத்திற்குப் பெரிய நன்கொடை அளித்துள்ளார்.

'The mystic strain in Bharati' என்ற தலைப்பில் ஆராய்வோருக்கு வற்றாத சுரங்கமாகவே பாரதியின் கண்ணன் பாடல்கள் திகழ்கின்றன.

இந்தக் கண்ணன் பாட்டில் ஆழ்வார்களின் அடிச்சுவட்டைப் பார்ப்பதுடன், மேலும் இரண்டு புதுமைகளையும் பார்க்கிறோம். 'கண்ணன் என் சேவகன்', 'கண்ணம்மா என் காதலி' ஆகிய இவை இரண்டுமே தமிழகப் பக்தி இலக்கியத்திற்குக் கிடைத்த புதிய வரவுகளாகும்.

கண்ணனைக் குறித்துப் பாரதி பாடிய பாடல்கள் அதி அற்புதமானவை. சர்க்கரை என்ற ஒன்றையே பயன்படுத்திப் பல வித இனிப்புப் பண்டங்கள் செய்து சுவைக்கிறோம். இது போலவே கண்ணன் என்ற பரம்பொருளையே பல வேறு நிலைகளில் வைத்துப் பாரதி தெய்விக இன்பத்தைப் பெற்றார். அதில் 'திக்குத் தெரியாத காட்டில்' என்று ஆரம்பிக்கும் ஒரே ஒரு பாடலை மட்டும் இங்கே குறிப்பிட விரும்புகிறேன்.

ஆன்மிக வாழ்க்கை கத்தி முனையில் நடப்பது போன்றது. இந்த உண்மையை, 'க்ஷுரஸ்ய தாரா நிசிதா துரத்யயா, துர்கம்பதஸ் தத் கவயோ வதந்தி' என்று கடோபநிஷதம் கூறுகிறது.

ஆத்மசாட்சாத்காரத்தை அடைவதற்கு முன்னால் ஒரு சாதகன் எத்தனை எத்தனையோ தடைகளை எதிர்கொள்ள வேண்டியிருக்கும். பரமாத்மாவை அடையும் ஆன்மிகப் பயணத்தில் ஜீவாத்மா எண்ணற்ற சிரமங்களை மேற்கொள்கிறது; இறுதியில் பரமாத்மாவை அடைந்தும் விடுகிறது. இந்த உண்மையைக் கருப்பொருளாகக்கொண்டு, 'திக்குத் தெரியாத காட்டில்' என்று துவங்கும் பாடலை அமைத்திருக்கிறார் பாரதியார். இந்தப் பாடலைப் படிக்கும்போது, 'தீமை காட்டி விலக்கிடும் தெய்வம்' என்ற அடி நம் உள்ளத்தில் எதிரொலிக்கிறது.

### இஷ்ட தெய்வத்திடம் ஈடுபாடு—சரணாகதி

ஒவ்வோர் உபாசகனுக்கும் இஷ்டதெய்வம் என்று ஓர் தெய்வம் இருக்கும். தன் உள்ளத்திற்கு மிகவும் நெருக்கமான அந்தத் தெய்வமே நிர்க்குணமான பரப்பிரம்மம் என்பதைச் சாதகன் நன்கு அறிவான். அந்தப் பரப்பிரம்மத்தின் தோற்றங்களாகவே எல்லாத் தெய்வங்களையும் அவன் கருதுவான். ஒரு தெய்வமே பலவாகத் திகழ்

கிறது என்பதைப் பாரதி 'விநாயகர் நான் மணிமாலை'யில் பின்வருமாறு சொல்கிறார்:

ஆதி மூலமே! அனைத்தையுங் காக்கும்
தேவதேவா, சிவனே, கண்ணா,
வேலா, சாத்தா, விநாயகா, மாடா,
இருளா, சூரியா, இந்துவே, சக்தியே,
வாணி, காளீ, மாமக ளேயோ,
ஆணாய்ப் பெண்ணாய் அலியாய் உள்ளது
யாதுமாய் விளங்கும் இயற்கைத்
தெய்வமே
வேதச் சுடரே மெய்யாம் கடவுளே!

என்று பலவாறு குறிப்பிடுகிறார்.

ஒரு வீட்டில் மருமகள் இருக்கிறாள். அவள் தன் மாமனார் மாமியார் மைத்துனர் உறவினர் ஆகியோர் அனைவருக்கும் தொண்டு செய்கிறாள்; அன்பு பாராட்டுகிறாள். ஆனால் தன் கணவனிடம் அவள் பிரத்தியேக அன்பு கொண்டிருக்கிறாள்— இந்த உதாரணத்தை ஸ்ரீராமகிருஷ்ணர் இஷ்டநிஷ்டைக்குக் குறிப்பிட்டார்.



அது போல் பாரதி எல்லாத் தெய்வங்களையும் போற்றினார். தமது இஷ்டதெய்வமான காளியிடம் அதாவது அம்பிகையிடம் அவருக்குத் தனிப்பட்ட பக்தி இருந்தது. சக்தியைப்பற்றிப் பாடும்போது தமது கவிதை ஆற்றல் முழுவதையும் பாரதி பொழிந்துவிட்டார் என்றே சொல்லத் தோன்றுகிறது.

பண்டிதர்களையும் பாமரர்களையும் ஒருங்கே கவரும் வகையில் பாரதியின் 'முத்துமாரி', 'தேச முத்துமாரி' கவிதைகள் அமைந்துள்ளன.

'உலகத்து நாயகியே' என்று துவங்கும் 'முத்துமாரி' பாடலில், 'துணி வெளுக்க மண்ணுண்டு, தோல் வெளுக்கச் சாம்பருண்டு, மணி வெளுக்கச் சாணையுண்டு, மனம் வெளுக்க வழியில்லை' என்று கூறும் பாரதி, இறுதியில், 'அடைக்கலமிங்குனைப் புகுந்தோம்' என்று குறிப்பிடுகிறார். மேலும் அவர்,

---

உயிர் நின்றால் நிற்கட்டுமே! போனால் போகட்டுமே! நிற்கிறவன் நீயா? போகிறவன் நீயா? பயம் என்பதையே அறியாத, அசைக்க முடியாத அவ்வளவு தைரியம் வேண்டும். நாம் நம்மிடத்தில் நிலைத்தால் எல்லாம் தாமாக நடக்கும்.

—ஸ்ரீரமண மகரிஷி

---

வையகத்தினை ஆள்வது தெய்வம்;
இந்தத் தெய்வம் கதி என்றிருப்பீர்

என்றும் கூறுகிறார். காளி ஸ்தோத்திரத்தில் கவியரசர், 'காளி மீது நெஞ்சம் என்றும் கலந்து நிற்க வேண்டும்' என்று குறிப்பிடுகிறார்.

'கண்ணன் திருவடி எண்ணுக மனமே, திண்ணம் அழியா வண்ணம் தருமே' என்று 'கண்ணன் திருவடி' என்ற பாடலில் கூறுகிறார். இது போன்ற பாரதியின் பல வரிகள், 'எல்லாத் தர்மங்களையும் விட்டு என்னையே சரண் புகுவாயாக' என்ற கீதையின் சரணாகதி தத்துவத்தை நினைவுபடுத்துவனவாக அமைந்துள்ளன. 'தேச முத்து மாரி' பாடலில்—

தேடியுனைச் சரணடைந்தேன்
தேச முத்துமாரி
கேடதனை நீக்கிடுவாய்,
கேட்ட வரம் தருவாய்

என்று சொல்லும் பாரதி, மணிமகுடம் போன்று, மகாவாக்கியம் போன்று, தமது அனுபவத்திலிருந்து ஓர் அறிவுரையை—

நம்பினார் கெடுவதில்லை;
நான்கு மறைத் தீர்ப்பு;
அம்பிகையைச் சரண் புகுந்தால்
அதிக வரம் பெறலாம்

என்று குறிப்பிடுகிறார்.

மேலும், உரைநடையில் பாரதி சுட்டிக் காட்டிய ஒரு கருத்தையும் இங்கே குறிப்பிட விரும்புகிறேன்—''தெய்வத்தின் இஷ்டப்படி உலகம் நடக்கிறது. 'தெய்வமே சரண்' என்று நம்பி எவன் தொழில் செய்கிறானோ, அவன் என்ன தொழில் செய்த போதிலும், அது நிச்சயமாகப் பயன் பெறும். மனிதன் தன் உள்ளத்தைத்

தெய்வத்துக்குப் பலியாகக் கொடுத்து விட வேண்டும். அதுவே யாகம். அந்த யாகத்தை நடத்துவோருக்குத் தெய்வம் வலிமை, விடுதலை, செல்வம், ஆயுள், புகழ் முதலிய எல்லா விதமான மேன்மைகளும் கொடுக்கும். தன்னை மற. தெய்வத்தை நம்பு. எல்லா இன்பங்களையும் பெறுவாய். இது சத்தியம்.''—பாரதி நூல்கள்: மூன்றும் தொகுதி.

### உடலைப்பற்றி

'பரோபகாரார்த்தம் இதம் சரீரம்' என்பது ஆன்றோர் வாக்கு. தனது உடல் தெய்வத்தை வழுத்துவதற்காகவும், பிறருக்குத் தொண்டு புரிவதற்காகவும் இருக்க வேண்டும் என்ற கருத்துக் கொண்டவர் பாரதியார்.

நல்லதோர் வீணை செய்தே—அதை
நலங்கெடப் புழுதியில் எறிவதுண்டோ?
சொல்லடி சிவசக்தி—எனைச்
சுடர்மிகும் அறிவுடன் படைத்து
விட்டாய்
வல்லமை தாராயோ,—இந்த
மாநிலம் பயனுற வாழ்வதற்கே?

என்று 'நல்லதோர் வீணை' பாடலில் கூறும் பாரதி, தமது 'சக்தி' என்ற வசன கவிதையில்—'காளிக்குப் பூச் சூட்டினேன். அதைக் கழுதை ஒன்று தின்ன வந்ததே. பராசக்தியின்பொருட்டு இவ்வுடல் கட்டினேன். அதைப் பாவத்தால் விளைந்த நோய் தின்ன வந்தது. பராசக்தியைச் சரணடைந்தேன். நோய் மறைந்துவிட்டது' என்று குறிப்பிடுகிறார். ஃ

---

## பசியை ஏன் படைத்தான் ?

கா. ஸ்ரீ. ஸ்ரீ.

பட்டினி கிடந்து சாவதற்காகத் தேவன் பசியைப் படைக்கவில்லை. உணவு போதாமல் துன்புறுகிறவனும் சாகிறான்; பஞ்சபட்சிய பரமான்ன முண்டு களிப்பவனும் சாகிறான். சாவு என்பது அனைவருக்குமே சமமாக இருப்பது. எனவே, நிறைய உள்ளவன் வறியவனுக்குப் பங்கிட்டு உண்ணவே தோன்றியிருப்பது பசி. மாந்தர் ஒருவருக்கு ஒருவர் உதவி வாழ்வதற்கே அது ஏற்பட்டது.

தன் நண்பனுடன், உறவினனுடன், உடன் வேலைசெய்யும் தொழிலாளியுடன் சமமாக அமர்ந்து பகிர்ந்து உண்ணாதவன் நண்பனேயல்ல; மனிதத்தன்மையுள்ளவனுமல்ல.

செல்வம் படைத்தவன் இன்று மிதப்பில் இருக்கலாம்; ஆனால், எல்லாச் செல்வங்களுமே தேர்ச் சக்கரம் போலச் சுழன்று, ஒருவனிடமிருந்து மற்றவனிடம் மாறிச் செல்கின்றன. எனவே, ஏழைக்கு உதவுகிற பணக்காரன் நெடுவாழ்வுக்கு நன்மை தேடியவனாகிறான்.

தன்னைச் சுற்றிப் பலர் பட்டினியில் வாடிக் கிடக்க, வீட்டுக்குள் அமர்ந்து இனிய பண்டங்களைச் சுவைப்பவன், உணவை உண்பவனல்லன்; தன் சாவையே வரவழைத்துக் கொள்ளும் முட்டாள் அற்பன் அவன். அவன் உணவையல்ல, பாவத்தையே உண்கிறான். அவனுக்கு உண்மையான நண்பனோ உறவினனோ தோழனோ எவனும் இருக்க முடியாது.

வயலை உழும் ஏரின் கொழு, வயலைப் பண்படுத்தி மாந்தருக்கு உணவளிக்கிறது. நடந்து செல்லும் கால்கள், வழியைக் கடக்கக் கடக்கப் பல அழகிய காட்சிகளைக் காண வைக்கின்றன. கல்வியிற் சிறந்தவன், பேரவைகளில் நல்லுரையாற்றிப் பலருக்குப் பிரியமானவனாகிறான். அது போல, பிறருக்கு உதவும் கை, மற்றக் கைகளைவிட உயர்ந்தது.

எல்லோருமே வள்ளல்களாக விளங்க முடியாதுதான். நம்முடைய இரண்டு கைகள், ஒரே அளவினவாயினும் சமமான திறமையுடன் வேலைசெய்வதில்லை. ஒரே தாய் ஈன்ற இரண்டு பசுக்கள், ஒரே அளவில் பால் தருவதில்லை. இரட்டையராகப் பிறந்தவர்கள், சம வலிமையுடன் இருப்பதில்லை. அது போலவே, அண்ணன் தம்பியரே ஆயினும், ஒருவர் போல மற்றவர் கொடுப்பர் என்பதில்லை. —ரிக்வேதம், 10-117

---

# மறைத்து வைத்தோம்

கி. வா. ஜகந்நாதன்

இறைவனைக் காண்பது யாவருக்கும் எளி தன்று. அவன் நுட்பத்திலும் நுட்பமான பொருள். அணுவுக்கும் அணுவாய்க் கலந்து உறைபவன். அவன் இல்லாத இடம் ஏதும் இல்லையாயினும் அவனை நம்மால் காண முடிவதில்லை. அவனைக் காண வல்லவர் யார்?

**ஆர் வல்லார் காண அரன் அவனை ?**

என்று காரைக்காலம்மையார் ஒரு வினவை எழுப்புகிறார். அவன் சர்வாந்தர் யாமியாய் மறைந்து நிற்பதனால் நம்மால் காண முடியவில்லை என்று நாம் எண்ணு கிறோம். ஆனால் அதற்கு வேறொரு கார ணத்தை அம்மையார் சொல்கிறார்.

அருமையான மாணிக்கமொன்றை ஒரு வன் மிக அரிதில் பெற்றான். அதை யாவ ரும் காண வெளியில் வைப்பானா? அதைத் துணியில் கட்டிப் பத்திரமாகப் பெட்டியில் வைத்துப் பூட்டிப் பாதுகாப்பான். அரு



மையான பொருள்களை யாரும் அறியாமல் இரகசியமாகப் பாதுகாப்பான இடத்தில் வைத்துப் போற்றுவது உலகத்தார் இயல்பு. 'நான் எவ்வளவோ ஜாக்கிரதையாகப் பதுக்கிப் பாதுகாத்து வைத்திருக்கிறேன். அதை யார் காண முடியும்?' என்று அந்த மாமணியை வைத்திருப்பவன் சொல்வது போல அம்மையார் சொல்கிறார்.

**ஆர் வல்லார் காண அரனவனை?**

என்று தொடங்கியவர், அவ்வாறு காண முடியாமைக்கு உரிய காரணத்தைச் சொல் கிறார். 'அந்த மாணிக்கத்தைத் துணி யினாலே மூடிப் பெட்டிக்குள் வைத்திருக் கிறேன்' என்று மாணிக்கத்தை வைத்திருப் பவன் சொல்வது போலச் சொல்கிறார்.

அவரும் இறைவனாகிய மாணிக்கத்தை ஒரு துணியினாலே போர்த்து அதனுள்ளே அதை அமைத்திருக்கிறாராம். வெறும் துணியா அது? அன்பையே போர்வையாக்கி அதனால் போர்த்து அமைத்தாராம். இப் போது இறைவன் அன்பென்னும் போர் வைக்குள் அடங்கி நிற்கிறான்.

**அன்பு என்னும்**
**போர்வை யதனாலே போர்த்து அமைத்து.**

பிறகு ஓரிடத்தில் அடைத்துவிட்டா ராம். தானே தேடிப் பெற்றுத் தனக்கு உரிமையாக்கிக்கொண்ட மாணிக்கத்தை ஒருவன் தன் விருப்பம் போலப் பாதுகாத்து வைத்திருப்பான். ''நீ ஏன் இதை இப்படி ஒளித்து வைத்திருக்கிறாய்?'' என்று கேட் கும் உரிமை யாருக்கும் இல்லை. ''என்னு டைய பொருள் இது. இதை எப்படிப் பாதுகாக்க வேண்டும் என்பது எனக்குத் தெரியும். உனக்கு என்ன தெரியும்? நான் அதை உன் கண்ணில் காட்ட மாட்டேன். அதை யாராலும் காண முடியாது. நான் நல்ல பாதுகாப்பில் வைத்திருப்பதனால் அத னைக் காண வல்லார் யார் இருக்கிறார்கள்?'' என்று அவன் கேட்பது போலக் கேட்கிறார் அம்மையார். இறைவனைத் தம்முடைய நெஞ்சினுள்ளே அடைத்து வைத்துவிட் டார். அத்தகைய சிறப்பான உரிமையை அவர் பெற்றிருக்கிறார். அவருடைய நெஞ் சில் வேறு எதுவும் இல்லை. எந்தப் பொரு ளுக்கும் இடம் கொடாத அங்கே, அந்த ரங்கமாக இறைவன் என்னும் மாணிக் கத்தை அடைத்து வைத்திருக்கிறார்.

**சீர்வல்ல**
**தாயத்தால் நாமும் தனிநெஞ்சின் உள்ளடைத்து.**

''யாரும் காணக் கூடாது என்ற எண் ணத்தால் ஒரு மாயம் பண்ணி அந்த மாயத் தினால் எம் தனியான நெஞ்சின் உள்

ளிடத்தே மறைத்து வைத்திருக்கிறோம்'' என்கிறார்.

சீர்வல்ல
**தாயத்தால் நாமும் தனி நெஞ்சின் உள்ளடைத்து**
**மாயத்தால் வைத்தோம் மறைத்து.**

'இவனை மறைத்து வைத்ததனால் யாரும் இவனைக் காண முடியாது. உள்ளே அடைத்து வைத்ததனால் இவன் எங்கும் போகவும் முடியாது என்று எண்ணும்படி அடைத்து வைத்தோம், மறைத்து வைத்தோம்' என்கிறார். 'எம் நெஞ்சில் வேறு ஒன்றும் இல்லை. அங்கே காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாச்சரியம் என்ற தீய பொருள்கள் இருந்தால் இந்த அருமையான பொருளை அவற்றோடு சேர்த்து வைக்க இயலாது. எம் நெஞ்சில் அத்தகைய அழுக்குகள் இல்லை. சுத்தமான தனி நெஞ்சு அது. இதுதான் யாரும் புகாத இடம் என்று எண்ணி, யாரும் அறியாத மாயமான முறையினால் அந்தப் பரம் பொருளை உள்ளே வைத்து வெளியே போகாமல் அடைத்துவிட்டோம்' என்று சொல்கிறார்.

**ஆர்வல்லார் காண**
**அரனவனை? அன்பு என்னும்**
**போர்வை யதனாலே**
**போர்த்து அமைத்துச்—சீர்வல்ல**
**தாயத்தால் நாமும்**
**தனி நெஞ்சின் உள்அடைத்து**
**மாயத்தால் வைத்தோம்**
**மறைத்து.**

அரனை அன்பு என்னும் மூடுதுணியினாலே போர்த்து உள்ளே அமையச் செய்து, சிறப்பு மிக்க உரிமையால் நாம், வேறெதுவும் தன்னிடம் இல்லாத எம்முடைய தனி நெஞ்சின் அந்தரங்கத்திலே அடைத்துப் பிறருக்குத் தெரியாத மாயமான முறையினாலே மறைத்து வைத்துவிட்டோம். ஆகையால் அவனை ஆர் காண வல்லார்?

[அரனவனைக் காண வல்லார் ஆர் என்று கூட்டுக. அரனவனை:அவன், பகுதிப்பொருள் விகுதி. அரனை என்பதுதான் பொருள். போர்வையதனாலே என்பதிலுள்ள அது என்பதும் பகுதிப்பொருள் விகுதியே. போர்வை என்றது போர்த்தப்படுபவருக்குத் துன்பம் இல்லாமல் மூடியதைக் குறித்தது. குளிருள்ள காலத்தில் குளிரால் நடுங்கும் ஒருவருக்கு மற்றொருவர் போர்வையைப் போர்த்தினால் அதனால் அவர் இன்பம் அடைவாரேயன்றிச் சினம் கொள்ளமாட்டார். அவ்வாறு அன்பினால் போர்த்தும் பொழுது இறைவன் அதை மனமுவந்து ஏற்றுக்கொள்வான். போர்த்தல்—மூடுதல். அமைத்தல்—வெளியில் பிதிர்ந்து வராமல்



இருக்கச் செய்தல். சீர் வல்ல—இறைவனிடம் கொண்ட நெருக்கத்தால் பெற்ற சிறப்பிலே உரம் பெற்றிருந்த. இறைவனுடைய சிறப்புக்களையெல்லாம் அறிய வல்ல என்றும் பொருள் கொள்ளலாம்.

தாயம்—உரிமை. நாமும்: உம்மை மற்ற அன்பர்கள் செய்வதைப் போல நாமும் செய்தோம் என்று குறித்தது; எச்ச உம்மை. தனி நெஞ்சு—வேறு ஒன்றும் புகாத நெஞ்சம். நெஞ்சின் உள்—அந்தரங்கத்தில். 'மாயத்தால் உள்ளே அடைத்து மறைத்து வைத்தோம்' என்று கூட்டுக. மாயம் என்றது பிறர் அறியாதவாறு என்பதைக் குறித்தது.]

இறைவனை அன்பினால் உரிமையாக்கிக் கொள்ளலாம் என்பது கருத்து.

அற்புதத் திருவந்தாதியில் வரும் 96-ஆவது பாடல் இது. ஃ

தவத்தின் சிறந்த பகுதி மன அமைதியே. —அரவிந்தர்




# துணிவு மிக்க சிறுவன்

சத்தியகாமன்

ஒரு நாடகக் கொட்டகையில் நாடகம் நடந்துகொண்டிருந்தது. மக்கள் நாடகக் காட்சிகளில் மனதைப் பறிகொடுத்து ரசித்துக்கொண்டிருந்தார்கள்.

அப்போது எதிர்பாராத வகையில் திடுமென்று நாடகமேடையில் ஒரு காட்சி. அதில் நாடகத்திற்குச் சம்பந்தமே இல்லாத பாத்திரங்கள் நாடக மேடையில் தோன்றினர். அதைத் தொடர்ந்து நாடகமேடையிலும் மக்களிடமும் சலசலப்பு எழுந்தது.

விஷயம் இதுதான்—நாடகத்தில் முக்கியப் பாத்திரம் ஏற்று நடித்துக் கொண்டிருந்த நடிகர்களில் ஒருவர் எவரிடமோ பணம் கடன் வாங்கியிருந்தார். அது காரணமாக, அந்த நடிகரைக் கைது செய்யும்பொருட்டு ஆங்கிலேயப் போலீசார் கையில் வாரன்ட்டுடன் நாடகமேடைக்கே சென்றுவிட்டனர்.

இந்த விஷயம் நாடகம் பார்க்க வந்திருந்த பொதுமக்களுக்குத் தெரிய வந்தது. ஆனால் அவர்கள் அனைவரும் மறுப்பு எதுவும் தெரிவிக்காமல் நிச்சப் தமாக இருந்தனர்.

அப்போது ஒரு சிறுவனின் குரல் போலீஸ்காரரை நோக்கி இடிபோன்று அங்கே முழங்கியது:—"மேடையை விட்டு வெளியே போ! நடிகரைக் கைது செய்யும் உன் வேலையை நாடகம் முடிந்த பிறகு வைத்துக்கொள். நாடகத்தின் இடையில் புகுந்து பொதுமக்களைத் தொந்தரவுபடுத்தாதே!"

அந்தச் சிறுவனின் குரல் திட்டவட்டமாகவும் போலீஸாருக்குக் கட்டளை பிறப்பிப்பது போலவும் இருந்தது. அதைக் கேட்டுப் போலீஸாரே திடுக்கிட்டு விட்டனர்.

அதற்குள் சிறுவன் கூறியதை ஆமோதித்துப் பொதுமக்களும் ஒருமித்த குரலில் போலீசாரை நோக்கி, "மேடையை விட்டுக் கீழே இறங்கு. நாடகம் முடியும் வரையில் காத்திருந்து நடிகரைக் கைது செய்துகொள்" என்று கூவினர்.

போலீசாரும் அவ்விதமே நடந்துகொள்ளும்படி ஆயிற்று.

பொதுமக்கள் சரியான சமயத்தில் குரலெழுப்பிய சிறுவனைப் பாராட்டினார்கள்.

இது நடந்த சமயத்தில் துணிவு மிக்க அந்தச் சிறுவனுக்கு வயது பதினான்கு. பிற்காலத்தில் அந்தச் சிறுவன் வளர்ந்து பெரியவனானபோது அஞ்சாமை என்ற கருத்தை ஆணித்தரமாக இந்திய மக்களுக்குப் போதித்தான். ஆம், பிற்காலத்தில் சுவாமி விவேகானந்தராக மலர்ந்த நரேந்திரன்தான் அந்தச் சிறுவன்.



## நாய்க்கு வைத்தியம்

நாடோடி

ஒரு சமயம் மதனமோகன் மாளவியா பிரயாகையில் இருந்தார். அப்போது அந்த ஊரில் இருந்த ஒரு நாய்க்குக் காதுக்குப் பக்கத்தில் புண் ஏற்பட்டது. புண்ணினால் ஏற்பட்ட வலி, அதைக் கொசுக்கள் மொய்த்ததனால் ஏற்பட்ட வலி ஆகிய இரண்டையும் பொறுக்க முடியாமல், நாய் பைத்தியம் பிடித்த மாதிரி மேலும் கீழும் ஓடிற்று. புண்ணிலிருந்து நாற்றம் வீசிக்கொண்டிருந்தனால் எங்கே போனாலும் மக்கள் அதைத் துரத்த ஆரம்பித்தார்கள்.

ஒரு நாள் மாளவியா அந்த நாயைப் பார்த்தார். உடனே அவருக்கு அதன்மீது இரக்கம் ஏற்பட்டது. அந்த நாய்க்கு எப்படியாவது உதவத் தீர்மானித்தார்.

தமக்குத் தெரிந்த ஒரு வைத்தியரிடம் சென்று அந்த நாயின் புண்ணுக்கு என்ன மருந்து போடலாம் என்று கேட்டு அதை வாங்கினார்.

வைத்தியர் அவரை எச்சரித்தார்—“இந்த நிலையில் நாய்க்குப் பைத்தியம் பிடித்திருந்தாலும் பிடித்திருக்கும். அது உங்களைக் கடித்தால் உங்களுக்கு ஆபத்து. ஆகவே எது எப்படியாவது போகட்டும் என்று விட்டுவிடுங்களேன்” என்றார்.

“கஷ்டப்படும் ஒரு ஜந்துவை எப்படியாவது போகட்டும் என்று எப்படி விட முடியும்?” என்று வைத்தியரிடம் கேட்டுவிட்டு, மாளவியா மருந்தை எடுத்துக்கொண்டு வீட்டுக்கு வந்தார். ஒரு பெரிய மூங்கிற்கழியை எடுத்து, அதன் நுனியில் ஒரு துணியைச் சுற்றிக் கட்டினார். துணியில் மருந்தைத் தடவினார். பிறகு கழியைக் கையில் எடுத்துக்கொண்டு நாயைத் தேடிச் சென்றார்.

கடைசியில் நாய் இவரைக் கண்டதும் பல்லைக் காட்டிச் சீறிற்று. எங்கே மேலே பாய்ந்து கடித்துவிடுமோ என்று பயப்படும்படியாக இருந்தது. ஆனால் மாளவியா பயப்படாமல் கழியின் நுனியில் இருந்த மருந்தை அதன் புண்ணில் தடவினார். அதற்குப் பிறகுதான் அவருக்கு நிம்மதி ஏற்பட்டது. ஃ

---

மனிதன் எவன்? அவன் எதனால் ஆக்கப்படுகிறான்? மனிதன் எண்ணம். அவன் எண்ணத்தால் ஆக்கப்படுகிறான். —திரு. வி. கல்யாணசுந்தரனார்

மௌனமாக இருக்கக் கற்றுக்கொள். வாய்வேதாந்தம் வேண்டாம். முகஸ்துதியாகப் பேசாதே. ககனவெளியில் மாமனம் தகனம். அனுமானப் பேய், சந்தேகப்பேய் ஒழி.
—பின்னலூர் துரியானந்தர்

ஒரு சமயம், ஆயிரம் குதிரைகளைப் பலிகொடுத்துச் செய்த யாகங்களைத் தராசின் ஒரு பக்கத்திலும் சத்தியத்தை மற்றொரு பக்கத்திலும் வைத்து நிறுத்தபோது, அந்த யாகங்களைக் காட்டிலும் சத்தியமே அதிகப் பாரமாக இருந்தது. —மகாபாரதம், சாந்தி பர்வம்

எவன் தியானத்தின் முடிவான உபசாந்தியை அடைந்துள்ளானோ, எவன் பயத்தையும் பாசத்தையும் பாவத்தையும் ஒழித்துவிட்டானோ, அவன் பிறவியாகிய முட்களைக் களைந்தெறிந்தவன். இந்தச் சடலமே அவன் எடுக்க நேர்ந்த கடைசி உடம்பாகும்.—புத்தர்

நீ செய்த தர்மத்தைப்பற்றித் தண்டோரா போட வேண்டாம். உன் வலக்கை செய்யும் தர்மத்தை இடக் கை அறியாமலிருக்கட்டும். —நற்செய்தி

---

# யார் வைணவன்?

..........................................................................தி. வேங்கடகிருஷ்ணன்

**தோ**ன்றிய காலத்தை ஆராய்ந்து அறுதியிட்டுக் கூற முடியாத அளவு தொன்மையையுடைய நமது இந்து சமயத்தின் இரு கண்கள் போலத் திகழும் இரு பெரும் பிரிவுகள் சைவமும் வைணவமும் ஆகும். சிவபெருமானை முழுமுதற் கடவுளாகக் கொண்டு வழிபடும் சமயம் சைவ சமயமாகும். அவ்வாறே விஷ்ணு அல்லது திருமாலை முழுமுதற் கடவுளாகக் கொண்டு வழிபடும் சமயம் வைணவ சமயமாகும். இந்தச் சமயத்தைப் பின்பற்றித் திருமாலையே முழுமுதற் கடவுளாக வழிபடுபவர்கள் வைணவர் எனப்படுகின்றனர். 'வைணவன் யார்?' என்பதற்கு இது சுருக்கமான விளக்கமாகும். இனி, வைணவனின் இயல்புகளைச் சற்று விரிவாகக் காண்போம்.

ஒரு பொருளை அதன் புறத் தோற்றத்தைக் கொண்டுதான் நாம் அறிந்துகொள்கிறோம். அந்த நிலையில் வைணவரின் புறத்தோற்றம் எவ்வாறு இருக்கும் என்பதை நோக்குவோம்.

வைதிக மரபுப்படி வைணவன், 1. திருமண் காப்பு அணிந்து, 2. துளசி மணிமாலை, திருப்பவித்திர மாலை முதலியன கழுத்தில் அணிந்து, 3. தோள்களில் சங்கு சக்கர இலச்சினைகளைப் பொறித்துக்கொண்டு, 4. சிகை அதாவது குடுமி வைத்துக்கொண்டு, 5. அமைதியான தோற்றத்துடனும் குளிர்ந்த பார்வையுடனும் இருக்க வேண்டும்.

இனி, மேலே குறிப்பிட்ட ஐந்தையும் பற்றி விரிவாகப் பார்ப்போம்.

**1. திருமண்காப்பு**— இதை வடமொழியில் 'ஊர்த்வபுண்ட்ரம்' என்பர். திருமண் அல்லது நாமம் மேல்நோக்கி (ஊர்த்வமாக) இடப்படுவதனால் ஊர்த்வ புண்ட்ரம் என்னும்பெயர் பெற்றது. இதில் இரு வெள்ளைக் கோடுகள் அல்லது பட்டைகளும், அவ்விரண்டுக்கும் நடுவில் சிவப்பு நிறமான ஸ்ரீசூர்ணம் என்னும் பொடியும் நெற்றியில் இடப்படுகின்றன. வெள்ளைக் கோடுகள் இரண்டும் திருமாலின் இரு திருவடிகளுடைய அடையாளமாக உள்ளன. நடுவிலுள்ள ஸ்ரீசூர்ணம் பெரிய பிராட்டியாரான திருமகளின் அடையாளமாக உள்ளது. வைணவன் எப்பொழுதும் தன் இதயத்தில் எம்பெருமானுடைய திருவடித் தாமரைகளை இருத்திக்கொண்டிருக்கிறுன் என்பதோடல்லாமல், தன் நெற்றியிலும் அவற்றைத் தாங்கிக்கொண்டிருக்கிறுன் என்பதை உணர்த்துவதற்காகத் திருமண் இட்டுக்கொள்ளப்படுகிறது. இறைவனின் திருப்பெயர்களை ஓதிக்கொண்டு திருமண்ணை இட்டுக்கொள்வதனுல், இது நம் உடம்புக்கும் ஆன்மாவுக்கும் காப்பாக அமைகிறது என்ற நம்பிக்கை காரணமாக இது 'திருமண்காப்பு' என்று வழங்கப்படுகிறது.

வைணவனின் நெற்றியில் திருமண் கண்டிப்பாக இருக்க வேண்டும் என்பதைப் பகவான் வேதவியாசர் ஒரு சுலோகத்தில் கூறுகிறுர்—'யே வா லலாடபலகே லஸதூர்த்வ புண்ட்ரா:, தே வைஷ்ணவா:' என்று. சைவர்களும், 'நீறில்லா நெற்றி பாழ்' என்று கூறுவது ஈண்டு ஒப்புநோக்கற்பாலதாகும்.

வைணவ மரபுகளை முற்றும் அறிந்திருந்த கவிச்சக்கரவர்த்தி கம்பர், தனது இராமாயணத்தில், இராமபிரான் தமது திருமண நாளன்று கோலஞ் செய்துகொண்டபோது திருமண்காப்புச் சார்த்திக்கொண்டார் என்பதைப் பின்வரும் பாடல் மூலம் விளக்குகிறுர்—

**என்றுநான் முகன்முதல் யாரும் யாவையும்**
**நின்றபே ரிருளினை நீக்கி நீணெறிச்**
**சென்றுமீ ளாக்குறி சேரச் சேர்த்திடும்**
**தன்திரு நாமத்தைத் தானும் சார்த்தியே.**

இதனால் திருமண்காப்பு மோட்சத்துக்குக் கொண்டு சேர்க்க வல்லது என்பதும் அறியக்கிடக்கிறது.

**2. துளசி மணிமாலை, திருப்பவித்திர மாலை முதலியன அணிதல்**—துளசிக்குப் பல விஷக்கிருமிகளைக் கொல்லும் ஆற்றல் உள்ளது. நாம ஜபம் செய்யும்போது எண்ணிக்கையைக் கணக்கிட இது உதவும். இந்த மாலைகள் புனிதமானவை என்று கருதி அணிவதனால், நமது மனம் இவற்றை அணியத் தகுந்த தூய்மையுடன் இருக்கவேண்டும் என்று நாம் எண்ணி அவ்வாறே ஆவோம்.



**3. இடது வலது தோள்களில் முறையே சங்கு சக்கர இலச்சினையைப் பொறித்துக் கொள்ளுதல்**—இது பஞ்ச ஸம்ஸ்காரம் என்று சொல்லப்படும் ஐந்து நற்காரியங்களுள் ஒன்றாகும். மற்ற நான்கு ஸம்ஸ்காரங்களாவன:—1. நெற்றியில் திருமண்காப்பு இட்டுக்கொள்ளுதல், 2. தாஸ்யநாமம் பெறுதல் அதாவது ஆசாரியன் சங்கு சக்கரங்களைப் பொறிக்கும்போது சீடனுக்கு ஒரு பெயரிடுவார்; இது தாஸ்யநாமம் எனப்படும். 3. திருமந்திரத்தை—ஓம் நமோ நாராயணாய என்னும் திருவஷ்டாக்ஷர மந்திரத்தை—ஆசாரியன் கூற அதைக் கூறுதல், 4. திருமாலை வழிபடுதல். இந்த ஐந்து கிரியைகளையும் சேர்த்துப் பஞ்ச ஸம்ஸ்காரம் என்பர். இதன் மூலம் ஆசாரியனைச் சரணாகப் பற்றுவதனால் இதை 'ஸமாச்ரயணம்' என்றும் சொல்வர்.

இவ்வாறு சங்கு சக்கரங்களைத் தோள்களில் பொறித்துக்கொள்வதனால் திருமாலுக்கு நம் உடம்பையும் ஆன்மாவையும் உரிமையாக்குவதாகக் கருதப்படுகிறது. இதனால் ஆன்மா புனிதமடைகிறது என்பர். இந்த வழக்கத்தைப் பற்றிய குறிப்பு, பெரியாழ்வாரின் திருப்பல்லாண்டுப் பதிகப் பாசுரத்தில் காணப்படுகிறது—

தீயிற் பொலிகின்ற செஞ்சுடராழி
 திகழ்திருச் சக்கரத்தின்
கோயிற் பொறியாலே ஒற்றுண்டு நின்று
 குடிகுடி யாட் செய்கின்றோம்
மாயப் பொருபடை வாணனை ஆயிரந்
 தோளும் பொழி குருதி
பாயச் சுழற்றிய ஆழிவல்லானுக்குப்
 பல்லாண்டு கூறுதுமே.

**4. குடுமி வைத்திருத்தல்**—பழங்காலம் முதல் இந்து சமய சாத்திரங்களில், குழந்தைகளுக்குச் செய்ய வேண்டிய நல்வினைகளில், ஆண் குழந்தைகளுக்குச் 'சௌளம்' என்பது ஒன்று. இதுதான் குடுமி வைப்பது. இது குழந்தையின் மூன்றாவது வயதில் நிகழ்த்தப்பட வேண்டும். ஆனால் இக்காலத்தில் இது மிகவும் அரிதாகிவிட்டது.

**5. சாத்துவிகத் தோற்றத்துடனும் அன்புடனும் இருத்தல்**—இறைவனுக்கு அடியாராக ஆனதும், ஆணவம் அனைத்தும் அகன்றுவிடும். அதனால் சாதுவாகவும் சாத்துவிகத் தோற்றமுடையவனாகவும், அன்புள்ளவனாகவும் வைஷ்ணவன் காணப்பட வேண்டும்.

'இவை அனைத்தும் புறச் சின்னங்களாகும். இவை தேவையா? வெளி வேஷம் எதற்கு?' என்று கேட்பவர் பலர் இருக்கின்றனர். ஆனால் சில புற வேடங்கள் அவற்றுக்கேற்ற குணங்களைத் தருவதை நாம் பார்க்கிறோம். எடுத்துக்காட்டாக, போர் வீரன், வீரனுக்கேற்ற ஒரு சிறப்புடையை அணிகிறான். அதனால் அவனுக்கு வீர உணர்ச்சி உண்டாகிறது. இவ்வாறே பக்தனுடைய வேடம் தாங்கியவன் தீய செயல் புரிவதற்கு நாணுவது இயல்பாகும். எனவேதான் இந்த வெளி வேஷங்களையும் நம் முன்னோர் வலியுறுத்தினர்.

இனிப் புறவொழுக்கத்தையும், அகஇயல்புகளையும் பற்றிக் காண்போம். ஒரு வைணவ பக்தர், வைணவப் பெரியார் ஒருவரிடம், "வைணவர் எவ்வாறு இருப்பார்?" என்றுகேட்டாராம். அதற்கு அந்தப் பெரியார், "வைணவர் 1. கொக்குப் போல்

இருப்பார், 2. கோழி போல இருப்பார், 3. உப்புப் போல இருப்பார், 4. உம்மைப் போல இருப்பார்'' என்றாராம். பின்பு இந்த நான்கையும் வருமாறு விளக்கினாராம்—

**(1) கொக்கு**—இது தூய வெண்மையாக இருக்கிறது. அது போல வைணவரும் அகமும் புறமும் தூய்மையாக இருப்பர். கொக்கு பொறுமையுடன் இரை கிட்டும் வரை நிற்பது போல வைணவரும், திருமாலருள் கிட்டும் காலம் வரை பொறுமையாகத் தவம் செய்வார்.

**(2) கோழி**— இது தானியங்களைப் பொறுக்கி எடுத்துத் தானும் உண்டு, தன் குஞ்சுகளுக்கும் கொடுக்கிறது. அது போல, வைணவரும், வேத சாத்திரப் பொருள்களைத் தாமும் அறிந்து பிற பக்தர்களுக்கும் விளக்குவார்.

**(3) உப்பு**—உணவுப் பொருள்களில் தான் கரைந்து, அவற்றுக்குச் சுவையூட்டுகிறது. அவ்வாறே வைணவரும் தம் நலம் கருதாமல் மற்றையோருக்கு நன்மை செய்ய வேண்டும். மேலும், உப்பின் சுவை தான் மற்றப் பொருள்களில் படியுமேயன்றிப் பிற பொருள்களின் சுவை உப்பில் படிவதில்லை. அவ்வாறே வைணவரும் தம்முடைய திருமால் பக்தியைத்தான் பிறரிடம் பரப்புவாரேயல்லாமல், பிற விளைவுகளால் பாதிக்கப்படமாட்டார்.

**(4) உம்மைப் போலிருப்பார்** என்பதற்கு, இந்தக் கேள்வி கேட்ட வைணவர் திருமண்காப்பு, துளசிமாலை, குடுமி முதலிய சின்னங்களுடன் விளங்கியதனால், வைணவர் அவரைப் போலச் சிறப்பான வைணவ சின்னங்களுடன் இருப்பார் என்று விளக்கினாராம்.

**6.** இவை தவிர, வைணவன் எப்பொழுதும் ஸ்ரீமந்நாராயணனையே எண்ணிக் கொண்டிருப்பான்.

**7.** நாள்தோறும் செய்ய வேண்டிய ஜப தபங்களைத் தவறாமல் செய்து நாராயணனை வழிபடுவான்.

**8.** தான் உண்ணும் பொருள்களையும், உடுத்தும் ஆடைகளையும், நுகரும் பொருள்களையும் திருமாலுடையனவாகக் கருதி, அவனுக்குக் கண்டருளப் பண்ணி அவனுடைய பிரசாதமாக எடுத்துக்கொள்வான்.

---

தன் உள்ளத்தைத் தூய நிலையில் வைத்துக்கொண்டு, பிறரிடம் உள்ள குற்றங்களை அருள்கண்ணால் பார்க்க வேண்டும். அதற்குப் பெயர்தான் 'மனிதப் பண்பு'.

—ராஜாஜி

* * *

எவன் நல்ல தொண்டுகள் செய்பவனாகவும், நம்பிக்கையுள்ளவனாகவும் இருக்கிறானோ அவனது முயற்சி நிராகரிக்கப்படுவதில்லை. 'பார்! அவனுக்காக அதை நாம் பதிவு செய்து வைக்கிறோம்' என்று இறைவன் கூறுகிறான். —ஒரு மகான்

---

**9.** நாராயணனையே எல்லாமுமாக நம்பி அவனைச் சரணமடைந்திருப்பான். பகவத் கீதையில் பகவான், 'ஸர்வதர்மாந் பரித்யஜ்ய மாமேகம் சரணம் வ்ரஜ | அஹம் த்வா ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மா சுச:' என்று அருளியுள்ளார். எனவே சரணாகதி தத்துவம் வைணவனுக்கு மிகவும் முக்கியமானது. துரியோதனனுடைய கொடிய சபையில், தீய துச்சாதனன் திரௌபதியின் துகிலை உரித்தபோது அவள் கண்ணனையே சரணாகப் பற்றி, உட்சோதியிற் கலந்து அபயம் கூற, உடனே அவளுக்குப் புடைவை சுரந்து அவளுடைய மானம் காக்கப்பட்டது.

**10.** உண்மையான வைணவன் நாள்தோறும் பகவத் கீதை, ஸ்ரீமத் ராமாயணம், ஸ்ரீமத் பாகவதம், ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ர நாமம், நாலாயிர திவ்யப் பிரபந்தம், நித்யாநுஸந்தானம் போன்ற ஆன்றோர் நூல்களைப் பாராயணம் செய்வான். இதை 'ஸ்வாத்யாயம்' என்பர்.

**11.** ஆசாரிய பக்தி—ஸ்ரீவைஷ்ணவர்கள் ஆசாரியனை இறைவனிலும் மேலாகக் கருத வேண்டும். இதனால்தான் ஸ்ரீவைஷ்ணவர் ஒருவர் பரமபதம் அடைந்தால், அவர் 'ஆசாரியன் திருவடிகளை அடைந்தார்' என்றே குறிப்பிடுவார்கள். இறைவனடி சேர்ந்ததாகவோ பரமபதம் அடைந்ததா

கவோ கூறுவதில்லை. ஆசாரியனின் திருவடி மோட்சத்தை அளிக்கும் என்று நம்ப வேண்டும்.

**12.** வைணவர்களிடையே உயர்வு தாழ்வு என்ற வேறுபாடு காட்டமாட்டான் சிறந்த வைணவன். விசிஷ்டாத் வைதக் கொள்கையை நிறுவிய ஸ்ரீராமானுஜர், தாம் அந்தணர், உயர்ந்தவர் என்று கருதாமல், வைசியராக இருந்த திருக்கச்சி நம்பி என்பவரைத் தமக்குக் குருவாகக் கொள்ள விரும்பினர். இவ்வாறே அரிசன ராகிய மாறனேர் நம்பி என்பவரை, அந்தணராகிய பெரியநம்பிகள், மற்ற வைணவர்களுடன் சமமாக நோக்கி, அவர் ஆசாரியன் திருவடி அடைந்ததும் அவருடைய ஈமக் கடன்களைத் தாமே அருகிருந்து அந்தணர்களுக்கு உரிய முறைப்படி செய்து முடித்தார்.

**13.** உண்மையான வைஷ்ணவன் தான் செய்யும் வினைகள் யாவற்றையும், பற்றற்றுக் கிருஷ்ணனுக்கு அர்ப்பிக்க வேண்டும்.

**14.** நன்மை, தீமை எது வரினும் அதை இறைவன் கொடுத்ததாகக் கருதி, நிலைத்த அறிவுடன் (ஸ்திதப் பிரஜ்ஞை) பெற்றுக் கொள்ள வேண்டும்.

இவை வைணவனுக்கு உரிய சிறப்பான இலக்கணமாகும்.

இனி, உண்மை வைணவராக வாழ்ந்து காட்டிய மகாத்மா காந்தியடிகள், தமது பிரார்த்தனைப் பாடல்களில் 'வைஷ்ணவ ஜனதோ' என்னும் பாடலைப் பாடுவது வழக்கம். அந்தப் பாடல், 'பிறவுயிர்களின் துன்பத்தை அறிந்து, அதைச் செய்யாமலிருப்பவனும், பிறர் துன்பத்தைப் போக்குபவனும், ஆணவம் கொள்ளாதவனும், ஒரு பொழுதும் பொய்யே பேசாதவனும், மன வாக்குக் காயங்களால் வைராக்கியத்துடன் இருப்பவனும், பிற பெண்களைத் தன் தாயெனக் கருதுபவனும் உண்மையான வைஷ்ணவன்' என்று இயம்புகிறது.

எனவே, எல்லா நற்குணங்களும் பூண்டு இறைவனிடம் இடையருத பக்தி பூண்டு பரோபகாரியாக விளங்குபவனே வைஷ்ணவன் என்பதை அறிந்துகொள்ள வேண்டும்.

ஃ

---

<u>நீதிக் கதை :</u> **மூடர் சேர்க்கை கேடு தரும்**—விவேகானந்ததாசன்

ஒரு மூடன், செட்டியார் ஒருவருடன் சேர்ந்து பிரயாணம் செய்தான். அப்போது இரவு வந்தது. மிகவும் இருட்டாக இருந்ததனல் மூடன் மைதானத்தின் வழியில் படுத்துக் கொண்டான். செட்டி அருகில் இருந்த ஒரு செடிமறைவில் படுத்துக்கொண்டான்.

அந்த வழியாகத் திருடர்கள் சென்றுகொண்டிருந்தார்கள். அப்போது திருடர் காலிலே மூடனின் கால் தட்டுப்பட்டது. அதைக் கண்ட ஒரு திருடன், ''இது என்ன! கட்டை போல் இருக்கிறது'' என்முன்.

அதைக் கேட்ட மூடன் உடனே கோபம் கொண்டு, ''போ போ, உன் வீட்டுக் கட்டை இடுப்பிலே ஐந்து பணம் முடிந்துகொண்டு நன்ருகப் படுத்திருக்குமா?'' என்று கேட்டான்.

அவன் சொன்னதைக் கேட்ட திருடர் அவனைப் பிடித்து, அவனிடம் இருந்த பணத்தைப் பறித்துக்கொண்டு போனர்கள்.

திருடர்கள் போகும்போது, ''இந்தப் பணம் செல்லுமோ செல்லாதோ?'' என்று தங்களுக்குள் பேசிக்கொண்டார்கள்.

அவ்விதம் அவர்கள் பேசிக்கொண்டதைக் கேட்ட மூடன், ''ஆ! என் பணம் அப்படிப்பட்டதா! வேண்டுமானல் என் பணம் செல்லுமா செல்லாதா என்பதைத் தெரிந்துகொள்ள, இங்கே செட்டியார் இருக்கிருர், அவரிடம் காட்டுங்கள்'' என்று அந்தச் செட்டியைச் சுட்டிக்காட்டிச் சொன்னன்.

திருடர்கள் செட்டியைப் பிடித்து அவனிடம் இருந்த நூறு வராகனையும் பறித்துக்கொண்டு போனர்கள். மூடர்களின் சேர்க்கையினல் தப்பாமல் கேடு வரும்.

—ஆறுமுக நாவலர் பாலபாடத்தில் எழுதிய ஒரு குட்டிக்கதையின் தழுவல் இது.

# சைவன் யார்?

: ராஜம் ஐயராமன் :

மனிதன் பிறப்பு இறப்பு என்ற துன்பச் சுழலில் சிக்கிச் சுழன்று சுழன்று துயரங்களை அனுபவிக்கிறன். இறுதியில் பிரமை நீங்கி இறைவன் திருவடியை நாடிச் செல்கிறன். இந்த உண்மையை—

சுழலார் துயர் வெயில் சுட்டிடும்போது
அடித் தொண்டர் துன்னும் நிழலாவன

என்று திருநாவுக்கரசர் குறிப்பிடுகிறர்.

இவ்விதம் இறைவன் இணையடி நிழலை அடைய விரும்பும் சீவனுக்கு, இறைவனின் பெருமையும் உயிர்களின் சிறுமையும் நன்கு புலனுகின்றன. எனவே அவன் இறைவனை அடைவது தவிர வேறு கதியே இல்லை என்பதை உணர முற்படுகிறன்.

இவ்வாறு பாசப்பற்று விடும்பொருட்டு முதல்வனைப் பற்றும் முறையை 'ஆன்மிக வாழ்க்கை' என்கிறேம்.

ஒருவன் தெய்வ வழிபாட்டு முறையால் வாழ்க்கையின் மேலான நோக்கம் வீடுபேறடைவதே என்பதை உணரும்போதுதான் அவன் 'சைவன்' ஆகிறன். அதாவது அது முதற்கொண்டே அவனிடம் சைவ வாழ்க்கை துவங்குகிறது.

**எது சைவம்?**

'சைவம்' என்பதற்கு, சிவ சம்பந்தம் உடையது என்று பொருள். எனவே எல்லா உயிர்களும் சிவசம்பந்தம் உடையவையே; யாவும் சைவமே ஆகும். இந்தப் பேருண்மையைத் திருஞானசம்பந்தர் புத்தமதத்தவர்களுக்குப் போதித்தார் என்று பெரிய புராணம் கூறுகிறது.

ஆயினும், எல்லா உயிர்களும் தமக்கு இயற்கையாய் அமைந்த சிவசம்பந்தத்தை மெய்ஞ்ஞானகுரு உணர்த்தினலன்றி உணர முடியாது.

உயிர்கள் சிவ சம்பந்தத்தை உணர்ந்து, சிவத்தைச் சேர்ந்து மேலான நன்மையை அடைவதற்கு உரிய ஆராய்ச்சியையும் செயல் முறைகளையும் வகுத்துக் கூறும் நெறியே சைவம் ஆகும். இதைச் சிவநெறி என்றும், சைவ சமயம் என்றும் சொல்லுதல் மரபு.

**சைவத்தின் தொன்மை**

சிவ வழிபாடும் சிவ நெறியின் அடிப்படைக் கொள்கைகளும் வரலாற்றுக் காலத்துக்கும் முற்பட்ட தொன்மை உடையவை. சைவம் என்பது ஒரு காலத்தில் எவரோ ஒரு தனிமனிதரால் நிறுவப்பட்டதல்ல.

சைவத்திற்கு அடிப்படையாக இருக்கும் ஞானநெறிகளைச் சிவபெருமான் முதன் முதலாக நான்கு முனிவர்களுக்கு ஓர் ஆல மரத்தின் கீழிருந்து உணர்த்தி அருளியதாகத் திருமுறைகள் குறிப்பிடுகின்றன.

ஓரால் நீழல் ஒண்கழல் இரண்டும்
முப்பொழுது ஏத்திய நால்வர்க்கு ஒளிநெறி
காட்டினை

என்பது ஞானசம்பந்தரின் திருவாக்கு. இந்த நிகழ்ச்சி உலகப் படைப்பின் துவக்கத்தில் நிகழ்ந்ததாகவே திருஞானசம்பந்தர் குறிப்பிடுகிறர்.

**சைவத்தின் அடிப்படைக் கொள்கைகள்**

சைவத்தின் வரம்பைத் தெளிய உணர்த்த வல்ல பல அடிப்படைக் கொள்கைகள் சைவத்தில் உண்டு. அவை முறையே—1. பிரமாண நூல்கள், 2. ஆசாரியர்கள், 3. முடிநிலை உண்மைப் பொருள்கள், 4. முப்பொருள்களுக்கிடையே உள்ள சம்பந்தம், 5. உயிர்களின் இருநிலை முதலியனவாகும்.

பன்னிரு திருமுறைகளும், பதினன்கு சாத்திரங்களும், இவற்றேடு மாறுபடாத

வேத ஆகமப் பகுதிகளும் பிரமாண நூல்கள் ஆகும். இந்த வழிகளில் வந்த பொருள் முடிவுக்கு உட்பட்ட பிற நூல்களும் பிரமாணம் ஆகும்.

சைவசமயக் குரவர்கள், சைவசந்தானக் குரவர்கள் எனப்பெறும் இரு வகை ஆசாரி யர்கள் சைவ சமய மெய்ப்பொருளை விளக்கியுள்ளார்கள்.

பதி, பசு, பாசம் (முடிநிலை உண்மைப் பொருள்) என்ற மூன்றும் ஆதியும் அந்த மும் இல்லாதவை (அநாதி) என்றும், எப்போதும் உள்ள பொருள்கள் என்றும் சைவம் கூறுகிறது.



முப் பொருள்களுள் உள்ள இறைவன் (பதி) ஏனைய இரண்டு பொருள்களையும் தன் ஆற்றலின்கீழ் அடக்கிக்கொண்டு செயற்படுகிறான். இறைவன் ஒன்றே, பல அன்று.

உயிர்கள் பல. உணர்த்தினால் மட்டுமே ஞானத்தை உணரும் இயல்பு உடையவை உயிர்கள். அவை பதி, பாசம் என்ற இரண் டையும் சார்ந்து அறிந்து அனுபவிக்கின்றன.

பாசம் என்பது உயிர்களின் உண்மை யான இயல்பைத் தடைசெய்து துன்பு றுத்தும் சடப்பொருள்.

உயிர்களின் இரு நிலை என்பது உயிர் களுக்கு உண்டாகும் பிறப்பு நிலை, வீட்டு நிலை என்பவை ஆகும். உயிர்கள் பாசத் தின் பிடியில் சிக்குண்டு பிறந்து பிறந்து உழலும் நிலை பிறப்பு நிலை (பந்தம்) எனப் பெறுகிறது.

உயிர்கள் பாசத்தின் பிடிப்பிலிருந்து விடு பட்டு இறைவனை அடைந்து பேரின்பத்தை அனுபவிக்கும் நிலை வீட்டு நிலை எனப்படும். இதுவே முக்தி நிலை என்றும் சொல்லப் பெறுகிறது.

இதுவரை சைவம், அதன் தொன்மை, அதன் அடிப்படைக் கொள்கைகள் ஆகி யவைபற்றி ஓரளவு பார்த்தோம். இனி, சைவன் என்பவன் யார்? அவனது புறச் சின்னங்கள் யாவை? அவன் எவ்விதம் சைவ நெறியில் சென்று வீடுபேறு அடை கிறான்? — என்பவற்றைச் சுருக்கமாகக் காண்போம்.

**சைவன் யார் ?**

**எந்நிலையில் நின்றாலும் எக்கோலம்**
**கொண்டாலும்**
**மன்னியசீர் சங்கரன்தாள் மறவாமை**

என்ற வாக்கின்படி, சைவன் என்பவன் சிவனையே முழுமுதற் பொருளாகக் கொண்டு, இறைவனது அருளாணையாகிய 'அறத்தின் வழி நிற்றல்' என்ற சைவ நெறியைப் பின்பற்றி வீடுபேறடைவான். இதை உணர்வதற்கு முன்பு, அவன் எந்தக் குடியில் பிறந்தாலும் அவனைச் சைவன் என்று கூறுவதில்லை. ஏனெனில், பிறப்பால் மட்டும் ஒருவன் சைவன் ஆகிவிடமுடியாது. சிவநெறியில் சென்று சைவம் காட்டும் குறிக்கோளை அனுபவமாக உணர்ந்தால் மட்டும்தான் ஒருவன் சைவன் ஆகமுடியும்.

**சிவதீட்சை**

சைவன் என்ற நிலை அடைந்த பிறகு அவனுக்குச் சைவ சமயத்தில் சிவதீட்சை தரப்படுகிறது. சைவத் திருமுறைகளை ஓது வதற்கும், சைவ ஒழுக்கத்தை ஏற்று நடப் பதற்கும் தகுதியை உண்டுபண்ணுவது சிவதீட்சையே ஆகும்.

**சைவனுக்கு உரிய ஆன்மிகச் சாதனங்கள்**

சைவன் தனது அகத்தையும் புறத்தை யும் தூய்மை செய்யும்பொருட்டுச் சிவ சின்னங்களை பக்தி சிரத்தையோடு அணிந்து, சிறப்பொழுக்கத்தைக் கடைப்பிடித்துக் காட்சிக்கு எளியவனாகத் தோன்றுவான். ஒரு சைவனிடம் காணப்படும் இன்றியமை யாத சிறப்பு ஒழுக்கங்கள்-1. எவ்வுயிர்க்கும் அன்பாய் இருத்தல், 2. சிவ சின்னங்களை அணிந்துகொள்ளுதல், 3. திருவைந்தெழுத் தைச் சிந்தித்தல், 4. திருமுறைகளை ஓதுதல்,

சாஸ்திரங்களின் உட்பொருள் தெளிதல், 5. சிவ பூஜை, சிவத் தியானம் செய்தல், 6. குரு-லிங்க-சங்கம வழிபாடு முதலியவை ஆகும்.

இவை ஆறும் ஒரு சைவன் அவசியம் கடைப்பிடித்து ஒழுக வேண்டிய ஒழுக்க நெறிகளாகும்.

### எவ்வுயிர்க்கும் அன்பாய் இருத்தல்

இது அனைவருக்கும் உரிய பொது ஒழுக்கமே என்ருலும், இது சைவனுக்குத் தனிச் சிறப்பைத் தருவதாக உள்ளது. கொல்லாமை, புலால் உண்ணுமை, கள்ளுண்ணுமை என்பவை இந்த ஒழுக்கத்துக்கு உரிய அடையாளமாகும். புலால் கலவாத உணவைச் 'சைவ உணவு' என்று பொதுவாக வழங்குவது இந்த உண்மையை வலியுறுத்துகிறது.

### சிவசின்னங்கள் அணிதல்

திருநீறு, ருத்திராட்சம் அணிவது சிவ சின்னமாகும். திருநீறு அணிவது, 'ஞானக்கினியால் மும்மலத்தையும் நீக்கித் தூய்மை பெறுவது மனித வாழ்க்கையின் குறிக்கோள்' என்பதை உணர்த்துகிறது. திருநீற்றை அணியும்போது 'சிவ சிவ' என்ற மனுவையோ, பஞ்சப் பிரம்ம மனுக்களேயோ உச்சரித்து அணிய வேண்டும். இது குழந்தைகளுக்கும் நோயுற்றவர்களுக்கும் காப்பாக (ரக்ஷை) அணிவிக்கப்படும். திருஞானசம்பந்தர், ''திருநீறு இல்லாத இடத்தில் தூய்மை உண்டாதல் இல்லை'' என்கிருர். மேலும் அவர், ''திருநீறே மந்திரம், தந்திரம் (ஆகமம்); திருநீறே மெய்ஞ்ஞானம் தருவது; புன்மையை நீக்குவது; முக்தி தருவது; சத்தியம் ஆவது; சித்தி தருவது; சேணம் (உயர்கதி) தருவது; உலக ஆசையைக் கெடுப்பது; அந்தம் ஆவது; அவலம் நீக்குவது; இடையூறுகளை ஒட்டுவது; புண்ணியத்தின் பயனுகக் கிடைப்பது'' என்று பலவாறு கூறுகிருர். இதன் மூலம், 'திருநீறு என்பது இறைவனது அருளாற்றலே' என்பது விளங்குகிறது.

ருத்திராட்சம் அணிவது, உயிர்களுக்கு மும்மலங்களால் வரும் துன்பங்களைக் களைவதற்கு, முதல்வனது திருக் கண்களில் தோன்றும் திருவருளைப் பெறும் அருளுக்கு அறிகுறியாகும். ருத்திராட்சம் அணிந்து நீரில் மூழ்கும்போது, அந்த மணியில் பட்டு உடம்பில் விழும் நீர், கங்கையின் புனித நீருக்குச் சமம் என்று கருதப்படுகிறது. மேலும், சைவன் பிறர் துன்பங்களைக் கண்டால் மனம் இரங்கி உதவ வேண்டும் என்பதைக் குறிப்பால் உணர்த்தவே அவன் ருத்திராட்சம் அணிகிருன்.

### திருவைந்தெழுத்தைச் சிந்தித்தல்

திருவைந்தெழுத்து, பஞ்சாட்சரம் என்று 'நமச்சிவாய' என்ற திருப்பெயரை வழங்குவது மரபு. இதில் ஸ்தூலம், சூட்சுமம், அதிசூட்சுமம், காரணம், பிரசாதம் என்று பல வடிவங்கள் சாதகனின் ஆன்ம வளர்ச்சிக்கு ஏற்ற வகையில் அறிவுறுத்தப்பட்டிருக்கின்றன.



திருவைந்தெழுத்தை ஜபிக்கும் முறைமையை உணர்ந்து, நாள்தோறும் இடைவிடாமல் இரவும் பகலும் ஜபித்து வந்தால், ஜபசித்தியால் விறகில் மறைந்துள்ள நெருப்பு அதைக் கடையும்போது வெளிப்படத் தோன்றுவது போல், ஐந்தெழுத்திலிருந்து சிவம் விளங்கித் தோன்றி, அவன் மீது அருளைப் பதித்துச் சிவானுபூதியை விளக்கும்.

### திருமுறைகள் ஓதுதல், சாஸ்திரங்களின் உட்பொருள் தெளிதல்

திருமுறைகளையும் சாஸ்திர நூல்களையும் ஓதி உணர்ந்து அவற்றில் கூறியபடி முதல்வனை வணங்குதல், வாழ்த்துதல், நினைத்தல், உள்நோக்கி உணர்தல் என்ற

முறையில் சைவனது வாழ்க்கை அமைய வேண்டும்.

**சிவ பூஜை, சிவத் தியானம்**

இவை அகமும் புறமும் சிவலிங்கத் திருமேனியைக் குறித்து நிகழும் சிவபூஜையும், மந்திரத்தைத் திருமேனியாகக் குறித்துச் சிவத் தியானம் செய்வதுமாகும்.

**குரு-லிங்க-சங்கம வழிபாடு**

திருக்கோயில் வழிபாடு, குரு வழிபாடு, சிவனடியார் வழிபாடு ஆகிய மூன்றும் சேர்ந்தே குரு-லிங்க-சங்கம வழிபாடாக அமைந்திருக்கிறது. சமய குரவர்கள் நால்வரும் திருக்கோயில் வழிபாடு என்பது சைவ சமயத்தின் உயிர்க் கொள்கை என உணர்ந்து அனுஷ்டித்தும் அறிவுறுத்தியும் உள்ளனர். உயிர்கள் செய்யும் வழிபாட்டை ஏற்று அருள் புரியும் இடங்களாகத் திருக்கோயிலில் உறையும் சிவலிங்கமும், ஆசாரியர் வடிவும், சிவனடியார்களும் திகழ்கின்றனர். எனவே இவை மூன்றையும் சைவன் தவறாமல் கடைப்பிடித்து ஒழுக வேண்டும்.

சிவனை அடைய வேண்டும் என்ற உணர்வும் உறுதியும் வந்த பிறகு, ஒருவன் தன் கிழான இயல்புகளையும் இறைவனது பெருங் கருணையையும் உணர ஆரம்பிக்கிறான். இறைவனிடம் அவன் அருளை வேண்டி ஓயாமல் முறையிடுகிறான். சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற அனுபவ ஒழுங்கின் மூலம் படிப்படியாக மேலேறிச் சென்று, இறுதிநிலையான வீடுபேற்றை அடைகிறான்.

இவ்விதம் உறுதியோடு முன்னேறிச் செல்லும் ஒருவனைச் சைவம் அன்போடு அணைத்துத் தன் அடியனாக ஏற்றுக்கொள்கிறது. மேலும், அவன் லட்சியமாகக் கொண்டுள்ள வீடுபேறு கிடைக்கும் என்ற உறுதியையும் தன்னம்பிக்கையையும் சைவம் தருகிறது. திருமுருகாற்றுப்படை இதை, 'இன்னே பெறுதி நீ முன்னிய வினையே' என்று கூறி, அவனுக்கு ஊக்கம் அளிக்கிறது.

முடிவாக, சைவமும் அதன் உயிர்நாடியாக விளங்கும் கோட்பாடுகளும் ஒருவனுக்கு, 'உற்றார் இல்லாதார்க்கு உறுதுணை ஆவன' என்று திருநாவுக்கரசர் கூறியுள்ள முறையில், துன்பத்தால் வருந்தி வழி தெரியாமல் உண்மையைத் தேடி அலையும் ஒருவனுக்கு, சைவம் தனது சித்தாந்த உண்மைகளைக் கடைப்பிடிக்கச் செய்து, ஆன்மிக ஆறுதலையும் அமைதியையும் தந்து, அவனது சிக்கல்களைத் தீர்த்து வைக்கிறது. மேலும், 'முக்தி தரும் இந்தத் தெய்வச் சபையைக் காண்பதற்குச் சேர வாரும் செகத்தீரே' என்று கூவி அழைத்து அவனைச் சைவனாக்குகிறது. ஃ

---

## பூசிக்கத் தக்க லிங்கம்

க்ஷணிக லிங்கம், உலோக லிங்கம், சைல லிங்கம், பாண லிங்கம் முதலியன பூசிக்கத் தக்கவை.

க்ஷணிக லிங்கமாவது—மண், அரிசி, அன்னம், ஆற்றுமணல், கோமயம், வெண்ணெய், ருத்திராக்ஷம், சந்தனம், கூர்ச்சம், புஷ்பம், சர்க்கரை, மாவு எனப் பன்னிரு வகைப்படும்.

இத்தகைய லிங்கங்களில் சிவபெருமான் பூசை முடியும் வரையும் வியாபகமாய் நின்று அனுக்கிரகம் செய்வார். பூசை முடிந்ததும் க்ஷணிக லிங்கத்தைக் கங்கையில் விடுதல் வேண்டும். அல்லது குறிப்பிட்ட ஒரு தினத்தில் விடுவது நல்லது. பன்னிரு வகை லிங்கத்தைப் பூசித்து அடையும் பலன்களைப்பற்றி அம்சுமான் ஆகமத்தில் கூறப்பட்டுள்ளது.

புற்று மண்ணால் அமைத்துப் பூசிப்பவர் மோட்சத்தையும், அரிசியால் அமைத்துப் பூசிப்பவர் செல்வத்தையும், அன்னத்தினால் அமைத்துப் பூசிப்பவர் தன தானிய விருத்தியையும், நதி மண்ணால் அமைத்துப் பூசிப்பவர் பூமி லாபத்தையும், கோமயத்தால் அமைத்துப் பூசிப்பவர் ரோக சாந்தியையும், வெண்ணெயால் அமைத்துப் பூசிப்பவர் மனதில் விரும்பிய பலனையும், ருத்திராட்சத்தில் அமைத்துப் பூசிப்பவர் ஞானவிருத்தியையும், சந்தனத்தில் அமைத்துப் பூசிப்பவர் போகத்தையும், கூர்ச்சத்தினால் பூசிப்பவர் புத்தி விருத்தியையும், புஷ்பத்தினால் அமைத்துப் பூசிப்பவர் ஆயுள்விருத்தியையும், சர்க்கரையினால் அமைத்துப் பூசிப்பவர் மனதில் விரும்பிய சித்தியையும், மாவால் அமைத்துப் பூசிப்பவர் சரீரபுஷ்டியையும் அடைவார்கள்.

# விவேக மொழிகள்



சுவாமி பிரேமானந்தர்

சாதாரணமாக மனிதன் எதைத் தேடு கிறுன் என்பதை நீங்கள் காணவில்லையா? அவனுக்கு வேண்டியது உலக இன்பம்— பணம், பதவி, சுகம். கடவுள் உண்டு என்று எத்தனை பேர் உள்ளூர நம்புகிறுர்கள்? நம்புகிறவர்களுக்குள்ளும் எத்தனை பேர் கட வுளைக் காண ஆவல், துடிப்பு உள்ளவர்கள்?

பெயர், புகழ், சிற்றின்பம், பணம் ஆகிய வற்றில் பற்றைத் துறந்து துறவு பூணக் கூடிய வீரர் எத்தனை பேர் இருக்கிறுர்கள்?

இந்தப் பிரபஞ்சம் அளவு கடந்தது. அதில் நிகழ்ச்சிகளுக்கும் எல்லையில்லை. பிற ருடைய குற்றங் குறைகளை நாம் கவனித் துக்கொண்டே போனுல் அதே குற்றங் குறைகள் நாளடைவில் நம்மிடம் தொற்றிக்கொள்ளுகின்றன.

பிறருடைய குறைபாடுகளைக் கவனிப் பதோ அவர்களைத் திருத்த முயலுவதோ நமது கடமை அன்று. பாடங் கற்றுக் கொண்டு வாழ்வதுதான் நம் கடமை. நம்மையே நாம் சோதித்துக்கொண்டு, கற்றது என்ன என்று பார்ப்போம்.

விதேசிப் பழக்கங்களும் அநீதியும் நாஸ்தி கமும் எங்கும் தலைவிரித்தாடுவதை நீங்கள் காணவில்லையா? உலகம் முழுவதையும் சீர்திருத்த உங்களிடம் சக்தி இருக்கிறதா? குருதேவர் கூறுவது போல் நீங்கள் இங்கு மாம்பழம் சாப்பிட வந்திருக்கிறீர்கள்; இலை களையும் கிளைகளையும் கணக்கிட வரவில்லை. திருப்தியாக மாம்பழம் சாப்பிடுங்கள். அதாவது கடவுளை உங்கள் உள்ளத்தில் கண்டு ஆனந்தம் அனுபவியுங்கள்.

நீங்கள் மனிதகுலத்திற்கு நன்மை புரிய வும் பிரசாரம் செய்யவும் விரும்புகிறீர்கள். ஆனுல் நீங்கள் சொல்வதை யார் கேட் கிறுர்கள்? அது குருடனுக்குக், குருடன் வழிகாட்டுவது போலத்தான். முதலில் ஞானத்தையும் முக்தியையும் சம்பாதித்துக் கொள்ளுங்கள். உலகம் துன்பத் தீயில் எரிந்துகொண்டிருக்கிறது. மனிதனும் தவித்துக்கொண்டிருக்கிறுன். ஸ்ரீராமகிருஷ் ணரிடம் சரண் புகுந்து எளிதில் முக்தி எய்தக் கூடிய இந்தக் காலத்தில் நாம் பிறந்தது அதிர்ஷ்டம். பரிசுத்தமான பக்தி உங்களுக்கு உண்டானுல் அமைதியையும் ஆனந்தத்தையும் அறிவீர்கள்.

பகவானிடம் பக்தியுள்ளவன் தனக்காகப் புகழை ஒரு பொழுதும் நாடுவதில்லை. அவனுடைய உள்ளத்தில் எப்பொழுதும் நிறைவு நிலவும். பிறர் இழிவுபடுத்தினுலும் அவன் கவலைப்படுவதில்லை. உலகமே அழிந்து போனுலும் அவன் ஆகாயத்தில் இருப்பிடம் தேடிக்கொள்வான்.

பகவத் பக்தனுடைய இயல்பு அதிசய மானது, தனிப்பட்டது. தம்பி! தனக்குச் ‘சொந்தம்’ என்பதற்கும் பிறர்க்குச் ‘சொந் தம்’ என்பதற்கும் அவனுக்கு வேறுபாடு தெரியாது. எவருடைய குணங்களையும் குற்றங்களையும் கவனிக்காமல், எல்லோரை யும் நேசித்து அவன் உலகில் வாழ்ந்து அதை விட்டு நீங்குகிறுன். ஆனுல் அவன் இறப்பதில்லை. அவனுடைய பக்தி அவனுக்குச் சாகா நிலையை, எல்லை கடந்த வாழ்வை அளிக்கிறது.

பிருந்தாவனத்தில் ராதை கிருஷ்ண னிடம் பிரேமபக்தி உள்ளவளாக இருந்த தனுல் அவள் சாகா நிலையை எய்தினுள். பிரேமை என்பது விலையற்ற, ஒப்புயர்வற்ற பொக்கிஷம். அதை நாம் கவர்ந்து கொண்டு நிறைசெல்வம் வாய்ந்தவரா வோம். இந்தச் செல்வத்தைப் பெறுவதற்கு மிருகபலம் தேவையில்லை. நல்ல நம்பிக்கை யும் திட சித்தமும் மரியாதையும்தான் வேண்டும். ஃ

# மன அலைகளின் ஆற்றல்

ஆர். நிவேதிதா

நமது உள்ளத்தில் பல எண்ணங்கள் எழுகின்றன. அவற்றின் ஆற்றல் அபாரமானது என்பதை விளக்கும் கட்டுரை இது.

**எண்ணம்**—நாம் செய்யும் ஒவ்வொரு செயலுக்கும் ஓர் எதிர்ச் செயல் உண்டு. நம்மிடமிருந்து வெளிப்பட்ட எண்ணங்கள் அதே வேகத்துடனே அல்லது அதிக வேகத்துடனே மீண்டும் நம்மை நோக்கியே திரும்பி வருகின்றன.

**எதிர்ச் செயல்**—ஒருவன் ஒரு நல்ல காரியம் செய்கிறான் என்று வைத்துக்கொள்வோம். அப்போது அதன் விளைவு மேலும் மேலும் அவனை நல்லவனாக்குகிறது. அத்துடன் மட்டுமின்றி, அதன் விளைவு மேலும் மேலும் அவனை நற்செயல்களில் ஈடுபடும்படியும் தூண்டுகிறது.

அது போலவே ஒருவன் ஒரு தீய செயலைச் செய்கிறான் என்று வைத்துக் கொள்வோம். அப்போது அதன் விளைவு அவன் முன்பு இருந்ததைவிட மேலும் அவனைத் தீயவனாக்குகிறது; மேலும் மேலும் அவனைத் தீய செயல்களில் ஈடுபட வைக்கிறது. முடிவில் அவன் தீயவனாகவே ஆகிவிடுகிறான்.

**எண்ண அலைகள்**—நம் மனதில் ஏற்படும் எண்ணங்கள் எவையாக இருந்தாலும், அவை எண்ண அலைகள் என்ற வடிவத்தில் உலகில் மிதந்துகொண்டே இருக்கின்றன.

நாம் ஏதோ ஒன்றைப்பற்றி எண்ணுகிறோம் என்று வைத்துக்கொள்வோம். அதே போன்ற எண்ணங்களை மற்றொரு மனிதன் நினைப்பதாகவும் வைத்துக்கொள்வோம். அந்த நிலையில் நமது எண்ண அலைகள் அந்த மற்றொரு மனிதனின் எண்ண அலைகளுடன் மோதுகின்றன. அதன் விளைவாக நம் எண்ணம் தூண்டப் பெற்று மேலும் தீவிரமடைகிறது.

இது போலவே, ஒரே விதமாக அமைந்த எண்ண அலைகள் ஒன்றோடு ஒன்று மோதி, தொடர்பு கொண்ட அந்த அந்த உள்ளங்களில் பலவித எழுச்சிகளைத் தோற்றுவிக்கின்றன.

இவ்விதம் இருவரின் எண்ண அலைகளுக்கிடையில் தொடர்பு ஏற்படுவதற்கு, அந்த இருவரின் உள்ளத்திலும் ஒன்று போலவே எழுந்த எண்ண அலைகளின் வேகமும் பலமுமே காரணமாக அல்லது ஆதாரமாக அமைகின்றன.

**விவேகானந்தர் கூறுகிறார்**—ஓர் எண்ண அலை அது போலவே அமைந்த மற்றோர் எண்ண அலையின் தொடர்பைப் பெறும் பொருட்டு நூற்றுக் கணக்கான மைல் தூரம் பயணம் செய்கிறது. தகுந்த எண்ண அலை கிடைக்காவிட்டால், அது கிடைக்கும் வரையிலும் நூற்றுக்கணக்கான ஆண்டுகள் ஆனாலும் வானவீதியில் மிதந்த படியே இருக்கிறது.

எண்ண அலைகளின் ஆற்றலைச் சாதாரணமாக நாம் நினைத்துவிடக் கூடாது. அபாரமான ஆற்றல் அவற்றுக்கு உண்டு.

சுவாமி விவேகானந்தரின் பின்வரும் கருத்துக்களை நாம் இங்கே நினைவில் கொள்வது பொருந்தும்:—

''நல்ல எண்ணங்கள், தீய எண்ணங்கள் ஆகியவற்றில் ஒவ்வொன்றும் தனித்தனியே வலிமை மிக்க ஆற்றலைப் பெற்றிருக்கிறது. இந்தப் பிரபஞ்சம் முழுவதிலும் அவை நிறைந்திருக்கின்றன. அவற்றின் அதிர்வுகள் தொடர்ந்து இருந்து வருவதனால், அந்த எண்ணங்கள் செயலுக்கு வரும் வரையில் அவை கருத்து வடிவில் இருக்கின்றன. உதாரணமாக, மனிதனின் கையிலுள்ள ஆற்றல், அவன் ஓர் அடி அடிக்கும் வரையிலும், அவன் அந்த ஆற்றலுக்குச் செயல் வடிவு தரும் வரையிலும் மறைந்திருக்கிறது. நாம் நல்ல, தீய எண்ணங்களின் உரிமையாளர்களாக இருக்கிறோம். நாம் நம்மைத்

தூய்மைப்படுத்தி நல்ல எண்ணங்களின் கருவிகளாக்கிக் கொண்டால், அவை நம்முள் நுழைகின்றன. நல்ல ஆன்மா தீய எண்ணங்களை எளிதில் ஏற்பதில்லை.

''அடக்கப்படாமல் சரியான வழியில் செலுத்தப்படாத மனம், நம்மை மேலும் மேலும் என்றென்றைக்குமாகக் கீழே இழுத்துச் சென்றுவிடும்; நம்மைப் பிளந்துவிடும்; அழித்துவிடும். ஆனால் அடக்கப்பட்டுச் சரியான வழியில் செலுத்தப்பட்ட மனமோ நம்மைக் காத்து விடுதலைபெறச் செய்யும்.



''சிந்தனையின் தொண்ணூறு சதவிகித ஆற்றல் சாதாரண மனிதனால் வீணாக்கப் படுகிறது. எனவே தொடர்ந்து அவன் பெரிய தவறுகளைச் செய்துகொண்டே இருக்கிறான். சரியான பயிற்சியைப் பெற்ற மனிதனின் மனமோ ஒருபோதும் தவறு செய்வதில்லை.

''நமது சொந்த மனப்பான்மைதான் நமக்கு ஏற்றாற்போல உலகத்தைத் தோன்றும்படி செய்கிறது. நமது எண்ணங்களே பொருள்களை அழகு பொருந்தியவையாக்குகின்றன; நமது எண்ணங்களே பொருள்களை அவலட்சணமாக்குகின்றன. இந்த உலகம் முழுவதும் நமது சொந்த மனதிலேயே அடங்கியிருக்கிறது. எல்லாவற்றையும் சரியான முறையில் புரிந்துகொள்ளக் கற்றுக்கொள்.

''மனித உள்ளத்தின் ஆற்றலுக்கு ஓர் எல்லையே இல்லை.''

**ஓர் உதாரணம்**—நாம் தொலைதூரத்தில் உள்ள யாரோ ஒருவரைக் குறித்து ஆழமாக அதாவது தீவிரமாக நினைத்துக் கொண்டே இருக்கிறோம் என்று வைத்துக் கொள்வோம். அந்த நமது எண்ணம் அலைகளாக விரிவடைந்து, பல மைல்தூரம் பயணம் செய்து நாம் யாரைப்பற்றி அதிகமாக நினைத்தோமோ அவரிடமும் அதிர்வை உண்டுபண்ணுகிறது; அவரையும் நம்மைக் குறித்து நினைக்கத் தூண்டுகிறது.

இது போன்ற பல உதாரணங்களை நாம் நமது அன்றாட வாழ்க்கையிலும் பார்க்கலாம். அவற்றை நாம் நம் எண்ண அலைகளின் விளைவு என்பதை உணராமல், ''நானும் உங்களைப்பற்றியே நினைத்துக் கொண்டிருந்தேன்; நீங்களே வந்துவிட்டீர்கள்!'' என்று சொல்கிறோம். அல்லது, ''உங்கள் நினைவாகவே இருந்தேன், அதற்குள் உங்களிடமிருந்தே எனக்குக் கடிதம் வந்தது'' என்று கூறி வியப்படைகிறோம்.

இவ்விதம் எண்ண அலைகளுக்கு இருக்கும் ஆற்றலைப் பலர் மனோவசிய முறைக்கும் பயன்படுத்துகிறார்கள்.

**விவேகானந்தரின் வாழ்க்கையில்**—சமீப காலத்தில் நம்மிடையே வாழ்ந்த ரிஷி சுவாமி விவேகானந்தர். அவர் வேதரிஷிகளைப் போன்ற ஆன்மிக உணர்வுகளுடன் திகழ்ந்தார்.

ஒரு சமயம் விவேகானந்தரின் வாழ்க்கையில் அவரது மனம் வேதகாலத்தைச் சேர்ந்த பெரியவர் ஒருவரின் எண்ண அலைகளைக் கிரகித்தது. சுவாமிஜியின் வாழ்க்கையில் இடம் பெற்றிருக்கும் அந்த நிகழ்ச்சி வருமாறு—

ஒரு நாள் சுவாமிஜியின் அகக் கண் முன்பு ஓர் அற்புதக் காட்சி தெளிவாகத் தெரிந்தது. சிந்துநதிக்கரையில் வயோதிகர் ஒருவர் நின்றுகொண்டிருக்கிறார். வேத ரிக்குகளை அவர் கோஷிக்கிறார். இதுவரை சுவாமிஜி கேட்டிராத ஸ்வரங்களில் அந்தப் பெரியவர் கானம் செய்கிறார்.

ஆயாஹி வரதே தேவி
த்ர்யக்ஷரே ப்ரஹ்மவாதிநி।
காயத்ரீ சந்தஸாம் மாதா
ப்ரஹ்மயோநி நமோஸ்து தே॥

என்ற பதங்கள் அரிய ஸ்வரங்களில் தெள்ளத் தெளிவாக சுவாமிஜியின் செவிகளில் விழுந்தன. ஆதிகாலத்து முனிவர்கள் இப்படித்தான் சங்கீதமயமாக வேதம் கூறியிருக்க வேண்டும் என்று முடிவு செய்தார் சுவாமிஜி. ஆசாரிய சங்கரரின் கவிதைகளில் இதே சங்கீதம் இருக்கும் அற்புத ஒற்றுமையையும் கண்டார் அவர்.

[அடுத்த இதழில் முடியும்]

# அருள்நெறிக் கதை

## எது வழி?

......................................................................சுவாமி கமலாத்மானந்தர்

ஒரு சமயம் ஒரு பெரிய துறவி இருந்தார். அவரிடம் மக்கள் சென்று உபதேசம் கேட்பது வழக்கம்.

துறவியின் அறிவுரைகளும் ஆறுதல் மொழிகளும் உலகத் தீயில் வெந்துகொண்டிருந்த மக்களுக்கு வரப்பிரசாதமாக விளங்கின. எனவே மக்கள் அந்தத் துறவியைத் தங்கள் வழிகாட்டியாகக் கருதினர்கள்.

ஒரு நாள் அந்தத் துறவியிடம் ஒரு கஞ்சன் வந்தான். உலோப குணத்திற்குப் பெயர் பெற்ற அவன், ''சுவாமி, நான் முக்தி அடைவதற்கு உரிய வழி சொல்லுங்கள்'' என்று கேட்டான்.

துறவி, ''மகனே, மகான்களும் சாஸ்திரங்களும் காட்டிய தார்மிக நெறிகளைப் பின்பற்று. ஏழை எளியவருக்கும் திக்கற்றவருக்கும் உதவிசெய்'' என்று பதில் கூறினர்.

துறவியின் பதிலைக் கேட்ட அந்தக் கஞ்ச மகாப்பிரபு, ''இந்தத் துறவியின் உபதேசத்தைப் பின்பற்றுவதைத் தவிர, முக்திக்கு வேறு வழியில்லை. ஆனல் இவர் சொல்வது போல ஏழை எளியவருக்கு உதவி செய்ய ஆரம்பித்தால் என் செல்வம் கரைந்து போய்விடுமே! ஆகவே இவரது உபதேசத்தை குறைந்த பட்சம் பின்பற்றுகிறேன். அதன் மூலமே முக்தியும் பெறுவேன்'' என்று தனக்குள் சொல்லிக்கொண்டான்.

அதன்படி அந்தக் கருமி, ஒரு நாளைக்கு ஒரு பிடி அரிசியை ஒரு பிச்சைக்காரனுக்குத் தானம் செய்து வந்தான். அதுவே தனக்கு முக்தியைத் தேடித் தந்துவிடும் என்றும் அவன் மனப்பூர்வமாக நம்பினன்.

இவ்விதம் சிலமாதங்கள் உருண்டோடின. கருமி மீண்டும் துறவியைத் தரிசிக்கச் சென்றான். துறவி, ''மகனே, நான் சொன்னபடி தானம் செய்கிறாயா?'' என்று வினவினர்.

கஞ்சன், ''ஆம் சுவாமி, ஒவ்வொரு நாளும் தவறாமல் யாராவது ஒரு பிச்சைக்காரனுக்கு ஒரு பிடி அரிசியைத் தானமாகக் கொடுத்து விடுகிறேன்'' என்று தான் தானம் செய்து வருவதைப் பெருமை பொங்கக் கூறினன். அவன் தான் செய்து வரும் தானம் காரணமாகத் தனக்கு நிச்சயம் முக்தி கிடைக்கும் என்ற உறுதியுடன் இருந்தான். துறவி தன் செயலைப் பாராட்டிப் பேசுவார் என்றும் எதிர்பார்த்தான்.

கருமியின் பதிலைக் கேட்டதும் துறவி ஒன்றும் பேசவில்லை. அவர் அப்போது ஒரு மரத்தடியில் அமர்ந்திருந்தார். அவர் தமது அருகிலிருந்த மரத்தின் அடிப் பாகத்தை விரல் நகத்தினல் கீற ஆரம்பித்தார்.

கஞ்சன் அங்கு நின்றுகொண்டேயிருந்தான். துறவி அவனையும் பார்க்காமல் நகத்தினல் மரத்தைக் கீறியபடியே இருந்தார். நெடுநேரம் பொறுமையோடு நின்றிருந்த கஞ்சன் துறவியிடம் அவரது செய்கைக்கான காரணம் கேட்டான்.

துறவி, ''நான் நகத்தால் மரத்தை வெட்டிக்கொண்டிருக்கிறேன். நீ அமைதியாக இரு'' என்றார்.

கஞ்சனுக்குச் சிரிப்பு வந்தது. அவன் துறவியிடம், ''கைநகத்தால் இவ்வளவு பெரிய மரத்தை வெட்ட முடியுமா? கோடாலியினல் செய்ய வேண்டியதை உங்களால் எப்படி நகத்தால் செய்ய முடியும்?'' என்று கேட்டான்.

துறவி, ''ஒரு பிடி அரிசியைப் பிச்சைக்காரனுக்குக் கொடுத்து நீ மோட்சத்தை அடையும்போது, என் விரல்நகத்தால் இவ்வளவு பெரிய மரத்தை வெட்டுவது ஒன்றும் பெரிய காரியமல்ல'' என்றார்.

துறவியின் பதில் கஞ்சனுக்குத் திகைப் பூட்டியது. மறு விநாடியே அவனுக்குத் தன் முட்டாள்தனம் பளிச்சென்று புரிந்தது. அவன் தன் தவற்றை உணர்ந்து மனம் மாறினன்.

இந்தக் கதையில் சொல்லப்பட்டுள்ள உண்மை, சிறிதளவு ஆத்மசாதனையும் விவேக வைராக்கியமும் பழகி முக்தி அடையலாம் என்று நினைப்பவர்களுக்கும் பொருந்தும். ஃ




சுவாமி கமலாத்மானந்தர்

**கேள்வி: ஆன்மிக வாழ்க்கையில் ஒருவர் மிகவும் முன்னேறியிருக்கிறார் என்பதை எப்படித் தெரிந்துகொள்ள முடியும்?**

**பதில்:** சத்துவகுணமும், சமத்துவ மன நிலையும் ஒருவரது ஆன்மிக முன்னேற்றத்தை உணர்த்துவதாக இருக்கும். தூய்மை, அகிம்சை, சுயநலமின்மை, உண்மையே பேசுவது, சாஸ்திரங்களில் சொல்லப்பட்ட கருத்துக்களை ஆழ்ந்து சிந்திப்பது, சத்சங்கத்தில் ஈடுபாடு, தியானம் போன்ற தெய்விகப் பண்புகள் அவரிடம் மலர ஆரம்பித்திருக்கும். அத்தகையவரின் முன்னிலையில் மக்கள் தங்கள் மனம் உயர்ந்த நிலைக்கு உயர்த்தப்படுவதை உணர்வார்கள்; கடவுள் நினைவும் மன அமைதியும் இயல்பாகப் பெறுவார்கள்.

**கேள்வி: பைரவி முத்திரை என்றால் என்ன?**

**பதில்:** சங்கற்பங்களும் விகற்பங்களும் மனதில் மாறி மாறி எழுகின்றன. இந்த நிலை விளக்குச் சுடர் காற்றில் அலைபாய்வது போன்றது.

சங்கற்ப விகற்பங்கள் ஒடுங்கி உள்ளம் தெய்வத்துடன் ஒன்றியிருக்கும் நிலை, ஆத்ம சாதனங்களில் ஆழ்ந்து செல்லச் செல்லப் படிப்படியாக ஏற்படுகிறது. இதனுடன் சம்பந்தப்பட்டதுதான் பைரவி முத்திரை.

பைரவி முத்திரையில் சாதகனின் கண்கள் மூடாமல் திறந்திருக்கும். ஆனால் அந்த நிலையில் அவன் மனமோ வெளிவியாபார மின்றி அகமுகப்பட்டுத் தெய்வ நினைவில் தோய்ந்திருக்கும். எனவே கண்கள் திறந் திருப்பினும் பைரவி முத்திரையின்போது அவன் புறவுலகம் பற்றிய நினைவிலிருந்து விடுபட்டிருப்பான். இந்த மனநிலையைக் காற்றில் அலைபாயாத விளக்குச் சுடருடன் ஒப்பிடலாம்.

ஸ்ரீராமகிருஷ்ணர் பைரவி முத்திரை என்ற பெயரைச் சொல்லவில்லை. எனினும் அவர் யோகியின் பார்வையுடன் தாய்ப் பறவையின் பார்வையை ஒப்பிட்டுக் கூறிய ஒரு கருத்து பைரவி முத்திரை என்பதற்கு மிகவும் சிறந்த விளக்கமாக அமைந் துள்ளது.

ஸ்ரீராமகிருஷ்ணர் கூறுவதாவது— ''யோகியின் மனம் எப்போதும் தெய்வத் தின் மீது நிலைத்திருக்கும்; எப்போதும் பரம்பொருளிலே மூழ்கியிருக்கும். ஒருவன் அந்த மாதிரியான மனிதன் என்று தெரிந்து கொள்ளுவதற்கு அவனைப் பார்ப்பது ஒன்றே போதும். அவன் கண்கள் முற்றும் திறந்தனவாயும், முட்டைகளின் மீது அமர்ந்து அடைகாக்கும் தாய்ப் பறவை போல யாதொரு குறிப்பும் இல்லாத பார் வையோடும் இருக்கும். அந்தப் பறவையின் முழு மனதும் முட்டைகளின்மீது நிலைத்திருக் கும். அதன் கண்களில் யாதொரு கருத்தும் இல்லாத பார்வை அமைந்திருக்கும்.''

**கேள்வி: அர்த்த பஞ்சகம் என்றால் என்ன?**

**பதில்:** இது வைணவர்களிடையே வழங்கி வரும் ஒரு பரிபாஷையாகும். ஐந்து பொருள்கள் என்ற கருத்தில் 'அர்த்த பஞ்சகம்' என்ற சொல் வழக்கத்தில் இருக் கிறது. அவை வருமாறு — 1. கடவுள், 2. ஜீவன், 3. கடவுளை அடைவதற்கு உரிய வழிமுறை (உபாயம்), 4. கடவுளை அடை யத் தடையாக இருப்பவை (பிரதிபந்தகம்), 5. கடவுளை அடைந்து அனுபவிக்கும் பயன் ஆகிய இந்த ஐந்தைப்பற்றிய அறிவையும் ஒருவன் பெற்றிருக்க வேண்டும் என்று வைணவம் கூறுகிறது. இவை பற்றிய அறிவு அர்த்த பஞ்சக ஞானமாகும்.

**கேள்வி : புறநானூற்றுப் பாடல்களில் ஆன்மிகக் கருத்துக்களே இல்லாமல் இருப்பது ஏன்? புலவர்கள் என்பவர்கள் சாதாரண மக்களைவிட அறிவாற்றல் மிக்கவர்களாக இருந்திருப்பார்கள் என்று நாம் நம்புகிறோம். அவ்விதம் இருக்கும் போது புறநானூற்றுப் புலவர்களுக்கு ஆன்மிகத்தின் சிறப்புத் தெரியாமலா இருந்திருக்கும்? அல்லது புறநானூற்றுப் பாடல்கள் எழுந்த காலத்தில் தமிழ் நாட்டில் ஆன்மிகம் புறக்கணிக்கப்பட்டிருந்ததா?**

**பதில் :** புறநானூறு அரசியல் நூலே தவிர ஆன்மிக நூல் அல்ல. அதைத் தொகுத்தவரின் நோக்கம் அரசியலையொட்டிய வாழ்க்கைமுறையைக் கூறுவதே ஆகும்.

எனவேதான் புறநானூற்றில் அரசியல், கலை, மன்னர்களிடையே ஒற்றுமை, நட்பு, வள்ளன்மை, பெண்டிரைப் பேணல், பசுவைப் பேணல், வீரம் ஆகிய கருத்துக்கள் பேசப்பட்டுள்ளன. அடிப்படை வாழ்க்கை முறை சரியாக இருக்குமேயானல் அது ஆன்மிகத்தில் செலுத்திவிடும்.

இன்று நமக்குக் கிடைத்திருக்கும் புறநானூற்றுப் பாடல்களை வைத்துக்கொண்டு இவை மட்டுமே அந்தக் காலத்தில் இயற்றப்பட்டன என்று சொல்லிவிட முடியாது. அந்நாளில் புலவர்கள் பாடிய பாடல்களில், பொதுவாக அரசனைச் சார்ந்திருந்த பாடல்கள் மட்டுமே தொகுக்கப்பட்டுப் புறநானூறு என்ற நூல் வடிவம் தரப்பட்டது. எனவே முழுக்க முழுக்க ஆன்மிகக் கருத்துக்கள் அடங்கிய பாடல்கள் அந்நாளைய புலவர்களால் எழுதப் பெற்றிருந்தும், அவை புறநானூற்றுப் பாடல் தொகுப்பில் விடுபட்டுப் போயிருப்பதற்கும் வாய்ப்பு இருக்கிறது.

துறவு, வாழ்க்கை நிலையாமை, வேத நெறிப் பேணல், கர்மவினை போன்ற கருத்துக்களும் புறநானூற்றுப் பாடல்களில் ஓரளவு இருக்கவே செய்கின்றன. எனவே புறநானூற்றுப் புலவர்கள் ஆன்மிகத்தின் சிறப்பை உணர்ந்திருந்தார்கள் என்பது நிச்சயம். புறநானூற்றுப் பாடல்களில் அங்கொன்றும் இங்கொன்றுமாக இருக்கும் ஆன்மிகக் கருத்துக்களை வைத்துப் பார்க்கும்போது, அவை எழுந்த காலத்தில் தமிழ்நாட்டில் ஆன்மிகம் சிறந்திருந்தது என்றே கொள்ளலாம். ஃ

---

சாஸ்திரம் எல்லையில்லாதது. அறிய வேண்டியது அதிகம். காலம் குறைவு. இடையூறுகள் பல. எது ஸாரமாயுள்ளதோ அதை, நீர் கலந்த பாலிலிருந்து பாலை மட்டும் ஹம்ஸம் கிரகிப்பது போல், நாடியடைய வேண்டும். —சங்கரர்

---

# வள்ளலார் வாக்கு

இந்த மானுட தேகம் கிடைத்தற்கு அரியது. இதைப் பேணிப் பாதுகாத்து, திடகாத்திரமாக வைத்துக்கொள்ள வேண்டும். இறைவன் வாழும் கோயில் இந்த உடம்பு என்னும் புனித உணர்வோடு, தூயதாகவும் ஆரோக்கியமாகவும் வைத்துக்கொள்வது ஒவ்வொருவரின் தலையாய கடமையாகும்.



பிறருடைய பசியை அகற்றுவதோடு மட்டும் ஒருவனுடைய ஒழுக்கமும் கடமையும் முடிவது கூடாது. பிறருக்கு ஏற்படும் ஏனைய துன்பங்களைக் களையவும் ஒவ்வொருவரும் உவந்து முன்வர வேண்டும்.

# வேதாந்தச் சிந்தனை

## ஒன்றும் பிறப்பதில்லை—அஜாதவாதம்

வி. ஆர். கணேசன்

உலக சிருஷ்டியைப் பற்றிப் பல கொள்கைகளும் வாதங்களும் இருந்து வந்திருக்கின்றன.

விஞ்ஞான ஆராய்ச்சியாளர்கள் ஆகாயத்தில் பல விண்பொருள்களாலும் கிரகங்களின் மோதல்களாலும் பூமி உண்டாகியிருக்கிறது என்றும், இதே போல் ஆகாசத்தில் சஞ்சரிக்கும் மற்றக் கிரகங்கள் முதலியவையும் உண்டாகியிருக்க வேண்டும் என்றும் கூறுகிறார்கள்.

கடவுள் உண்டென்று நம்பிக்கை உள்ளவர்களில் பலர், கடவுள்தான் உலக சிருஷ்டிக்கு முதற் காரணம் என்று நம்புகிறார்கள்.

மற்றும் சிலர், காலசக்கரச் சுழலினால் தான் பிரபஞ்சமே உண்டாகியிருக்கிறது என்று எண்ணுகிறார்கள்.

பரம்பொருளின் விருப்பத்தால் உலக சிருஷ்டி உண்டாயிற்று என்றும், உலகம் கடவுளின் ஜால வித்தை என்றும் சிலர் கூறுகிறார்கள். சிலர் பகவானின் லீலைகளில் உலக சிருஷ்டியும் ஒன்றாகும் என்றும் சொல்கிறார்கள்.

இந்தக் கொள்கைகள் எல்லாவற்றிலும் பொதுவானது என்னவென்றால், உலக சிருஷ்டிக்கு நிச்சயமாகக் காரணம் இருக்கிறது என்பதுதான்.

ஆனால், ஆதிசங்கரரின் பரம குருவாகிய கௌடபாதாசாரியர், மாண்டுக்ய உபநிஷதத்திற்கு விளக்கமாக அமைந்த தமது காரிகையில், 'அஜாதவாதம்—சிருஷ்டியே இல்லை' என்ற கொள்கையைப் பிரகடனம் செய்து, பல உதாரணங்களாலும், வேதத்தின் (சுருதியின்) பிரமாணத்தாலும், தர்க்கத்தாலும் அதை நிரூபிக்கிறார். குறிப்பாக, கீழே வரும் இரண்டு சுலோகங்களிலிருந்து அவரது கொள்கையை எடுத்துக் காட்டலாம்—

ந கச்சித் ஜாயதே ஜீவ:
ஸம்பவோஸ்ய ந வித்யதே ।
ஏதத் ததுத்தமம் ஸத்யம்
யத்ர கிஞ்சிந் ந ஜாயதே ॥ (3-48)

ஒரு ஜீவனும் பிறப்பதில்லை. அது உண்டாவதற்கு ஒரு காரணமும் இல்லை; இது (பரம் மெய்ப்பொருள்)தான் உத்தமமான சத்தியம். ஒன்றும் பிறப்பதே இல்லை.

தஸ்மாந் ந ஜாயதே சித்தம்
சித்தத்ருச்யம் ந ஜாயதே ।
தஸ்ய பச்யந்தி யே ஜாதிம்
கே வை பச்யந்தி தே பதம் ॥ (4-28)

ஆகையால், மனமும் உண்டாவதில்லை. மனதினால் அறியப்படும் பொருள்களும் உண்டாவதில்லை. அவை உண்டாகின்றன (பிறக்கின்றன) என்று எண்ணுகிறவர்கள் வானில் பறவைகளின் காலடிகளைக் கண்டவராவர்.

ஸ்வயம்பிரகாசமான பரம் மெய்ப்பொருளின் ஸ்வபாவமே ஒன்றாய், பேதமற்று, நித்தியமாய் நிலைத்திருப்பதுதானே! தன் ஸ்வபாவத்தை விட்டு வேறாக எப்படி அது இருக்க முடியும்? சிருஷ்டிக்குக் காரணம் என்ன இருக்க முடியும்? பரம்பொருள் எப்பொழுதும் பரிபூரணனாயிற்றே! ஆகையால் பரம் மெய்ப்பொருள் ஒன்றுதான் பேருண்மை.

ஜகத் சிருஷ்டிக்குக் காரணமே இல்லை. அதனால் ஒரு ஜீவனும் பிறப்பதில்லை. பறவைகளின் காலடிகளை வானில் காண முடியுமோ? எல்லாம் மாயையினால் தூண்டப்பட்டு, மனதினால் கற்பனை செய்யப்பட்ட நீண்ட கனவு போன்ற ஒரு தோற்றமே அல்லாமல் வேறில்லை.

பார்ப்பவன், பார்க்கப்படும் பொருள் என்ற வித்தியாசங்களும் வெறும் தோற்றம் தான். இதை அறிந்த ஞானிக்குப் பிறப்பு இல்லை, அழிவு இல்லை, சம்சார பந்தமும் இல்லை. உலகம் உண்டாவதுமில்லை, அழிவதுமில்லை. இதுதான் உண்மை. அந்த ஞானியே பரப் பிரம்மம்.

மேற்கூறிய கருத்துக்கு 'அஜாதவாதம்' (ஒன்றுமே பிறப்பதில்லை) என்று பெயர்.

கௌடபாதர் தம் காரிகையின் முதல் அத்தியாயத்தில் மாண்டுக்ய உபநிஷதத்தின் மந்திரங்களை விளக்கி, உபநிஷத்தின் மகாவாக்கியத்தின் தத்துவத்தையே அஸ்திவாரமாக வைத்துக்கொண்டு தமது கொள்கையை நிரூபணம் செய்திருக்கிறார்.



மோட்சத்தை விரும்புவோருக்கு மாண்டுக்ய உபநிஷதம் ஒன்றே போதும்; வேண்டிய ஞானம் இதிலிருந்தே சித்திக்கும் என்று கூறுகிறது முக்திகோபநிஷத்து.

பன்னிரண்டு மந்திரங்களே கூடிய, அதர்வ வேதத்தைச் சார்ந்த மாண்டுக்ய உபநிஷதம், இதர உபநிஷதங்களுள் மிகச் சிறியதாயினும் அனைத்தினும் மிகப் பெருமை வாய்ந்தது. இருதயத்தில் விரலை வைத்துச் சுட்டிக்காட்டும் மகாவாக்கியமான 'அயமாத்மா ப்ரஹ்ம—இந்த ஆத்மா பிரம்மமேதான்' என்ற உண்மையை இந்த உபநிஷதம் உபதேசிக்கிறது.

'ஓங்காரம் பிரம்மம்; உலகில் காண்பதெல்லாம் ஓங்காரமே; இந்த ஆத்மா பிரம்மம்' என்று கூறுகிறது மாண்டுக்ய உபநிஷதம்.

ஓங்காரத்தின் அ, உ, ம என்ற மூன்று அக்ஷரங்களும் முறையே அன்றாட வாழ்க்கையில் சாதாரணமாக அறியப்படும் மூன்று நிலைகளான விழிப்பு, கனவு, ஆழ்ந்த நித்திரை—இவற்றைக் குறிக்கும். இந்த மூன்று அக்ஷரங்களின் தொகுதியான ஓங்காரம், இந்த மூன்று நிலைகளையும் கடந்த நிலையான தூய மெய்யுணர்வைக் குறிக்கும்.

வழக்கத்தில் நான்காவதாகக் கருதப்படுகிற இந்த நிலைக்குத் துரியம் என்று பெயர்.

நாம் வாழ்க்கையில் ஒவ்வொரு நாளும் இந்த மூன்று நிலைக்கு உள்ளாகிய அனுபவங்களைச் சேர்த்துக்கொள்கிறோம்.

வெளிப் பொருள்களுடன் விவகாரங்களெல்லாம் விழிப்பு நிலையில் நேர்கின்றன. அப்பொழுது ஜீவன் உடல், புலன்கள், மனம், புத்தி, பிராணன் ஆகியவற்றுடன் இணைந்துகொண்டு, காரியங்களில் பங்கு கொண்டு, பல இன்ப துன்பங்களுக்கு உள்ளாகிறது.

கனவு நிலையில், பற்பல வெளி விவகாரங்களால் உண்டான அனுபவங்கள் நினைவுகளாக மாறி, சூட்சும சரீரத்தில் கனவு உலகத்தைக் கற்பனை செய்கின்றன. இந்த நிலையில் ஜீவன் சூட்சும சரீரத்துடன் இணைந்துகொண்டு கனவு உலகத்தை அனுபவிக்கிறது.

மூன்றாவது நிலையான ஆழ்ந்த நித்திரையில், ஒன்றையும் அறியாமல், ஒரு வித ஆனந்த அனுபவம் உண்டாகிறது. ஸ்தூல சூட்சும சரீரங்கள் இயங்காமலிருப்பதனால், இந்த நிலையில் என்ன நடக்கிறது என்று தெரிவதில்லை. இருந்தபோதிலும் நித்திரையில் நடப்பதை அறிந்துகொள்ள முடியாது என்ற உணர்வு இருக்கிறது. 'நன்றாக உறங்கினேன். நல்ல அமைதி கிடைத்தது' என்ற ஞாபகம் உண்டாவது, மெய்யுணர்வு சாட்சி போல் இருந்துகொண்டு ஆனந்த அனுபவத்தை நினைவூட்டுவதாகும்.

விழித்தெழுந்தவுடன் மறுபடியும் அந்த ஜீவன் உடல், புலன்களுடன் இணைந்துகொண்டு புறப்பொருள்களுடன் செயற்பட ஆரம்பிக்கிறது. இதுதான், உலகப்பற்று விடாமல் பிறப்பு இறப்புச் சுழலிலிருந்து விடுதலையடையாத, சம்சாரத்திலேயே கட்டுண்ட நிலைமையைக் குறிக்கிறது.

விழிப்பு நிலையில் வெளிப் பொருள்களை அனுபவிக்கும் உணர்வுக்கு வைச்வானரன் அல்லது விச்வம் என்று பெயர்.

கனவு நிலையில் வெளிப்பொருள் எதுவும் இல்லாமல் நினைவுகளாலேயே கனவு உலகத்து அனுபவம் உண்டாவதனால், பிரகாசமான இந்த உணர்வுக்குத் தைஜஸன் என்று பெயர்.

ஆழ்ந்த நித்திரை நிலையில் ஆனந்தத்தை அனுபவிக்கும் உணர்வுக்குப் பிராஞ்ஞன் என்று பெயர். தனித் தனியாக மூன்று பெயர்களைக் கொண்டபோதிலும், ஒரே உணர்வுதான் இந்த மூன்று நிலைகளிலும் மூன்று விதமாகச் சொல்லப்படுகிறது. பிரபஞ்ச திருஷ்டியில் தனி ஒருவனின் ஸ்தூல, சூட்சும, காரண சரீரத்துக்கு ஒத்தவாறு இந்த மூன்று நிலைகளில் ஜீவன்களின் அறிவுத் தொகுதி முறையே விராட் ஸ்வரூபம், ஹிரண்யகர்ப்பம், அவ்யக்தம் அல்லது ஈச்வரன் என்று கூறப்படுகிறது.*

இந்த மூன்று நிலைகளிலும் உண்டாகும் அனுபவங்கள் மாறி மாறி வந்தபோதிலும், இவை எல்லாவற்றையும் உணர்ந்து ஒரு மாறுதலும் அடையாமல், அந்தத் தூய மெய்யுணர்வுதான் பிரகாசித்துக் கொண்டிருக்கிறது. இதைத்தான் துரியம் என்றும் ஆத்மா என்றும் கூறுவார்கள். தேச கால வஸ்துக்களைக் கடந்த இந்த நிலையை அறிவதுதான் ஞான நிலை. இந்த நிலையில் அவித்யா (அறியாமை) கொஞ்சமேனும் இல்லை; கற்பனையும் இல்லை, உறக்கம் இல்லை, கனவும் இல்லை. இந்த நிலையில் உண்டாகும் ஐக்கிய பாவனையில் தன்னையும் பிரம்மத்தையும் ஒன்றாகவே அறிகிறான். இதுதான் முக்தி நிலை என்று உபநிஷதங்களில் கூறப்படுகிறது. இந்த நிலையில், ஆதிசங்கரர் கூறியுள்ள மாதிரி, 'ப்ரஹ்ம ஸத்யம், ஜகத் மித்யா, ஜீவோ ப்ரஹ்மைவ நாபர: — பிரம்மம்தான் உண்மை, உலகம் வெறும் தோற்றமே, ஜீவாத்மா பிரம்மமேயாம்' என்ற உணர்வுதான் இருக்கும். ஒரு சிறு உதாரணத்தால் இதை விளக்குவோம்.

ஒருவன் கனவில் மதம் பிடித்த யானை துரத்திக்கொண்டு வருவதைக் காண்கிறான். அவன் கீழே விழுந்துவிட்டான். யானை காலைத் தூக்கி அவனை நசுக்கும் தருணம். திடீரென்று விழித்துக்கொண்டான். அவன் உணர்ச்சி எவ்வாறு இருக்கும்?

படுக்கையில் படுத்திருக்கும் அவன் எங்கெங்கோ காட்டில் சென்று, யானைக் கூட்டத்தைக் கண்டு உண்மையாகவே தன்னை ஒரு யானை துரத்துவதாகக் கண்டு பிறகு விழித்தவுடன் காடும் இல்லை, யானைக் கூட்டமும் இல்லை, தான் சாகும் தருணத்திலும் இல்லை என்று அறிந்தவுடன் அவனுக்கு உண்டாகும் உணர்ச்சி எவ்வாறு இருக்கும்!

மற்றொருவன் கனவிலும் தன்னை ஒரு முமுட்சுவாக (மோக்ஷத்தைத் தேடும் சாதகனாக)க் காண்கிறான். குருவிடம் சென்று சாஸ்திரங்களைக் கற்றுக் கொள்கிறான். தியானத்தில் பாடுபடுகிறான். திடீரென்று கண் விழித்தவுடன், சாதகன் இல்லை, குரு இல்லை, சாஸ்திரம் இல்லை, மோக்ஷமும் இல்லை என்று ஆகிறது அல்லவா?

அதே மாதிரிதான், விழிப்பு நிலையிலிருந்து திடீரென்று ஒருவன் தூய மெய்யுணர்வை அறிந்தவனாக ஆனால், இந்த உலகத் தோற்றங்களும் அனுபவங்களுமே ஒரு நீண்ட கனவு போல்தான் காணும் என்று சொல்லலாம் அல்லவா? ஆனால், இந்த நிலையை அடைவது எளிதல்ல. இடைவிடாத தீவிர முயற்சியோடு கூடிய ஆத்ம சாதனை வேண்டும். இதற்கு உள்ள மார்க்கத்தையும் வரக்கூடிய தடங்கல்களையும்

| | தனி உணர்வு | பிரபஞ்சத்தின் அறிவுத் தொகுதி |
|---|---|---|
| *விழிப்பு நிலை | வைச்வானரன் (அ) | விராட் |
| கனவு நிலை | தைஜஸன் (உ) | ஹிரண்யகர்ப்பன் |
| ஆழ்ந்த நித்திரை | பிராஞ்ஞன் (ம) | ஈசுவரன் (அவ்யக்தம்) |
| துரியன் | ஓம் | ஓம் |

கூறி, கௌடபாதர் இந்தப் பாதையில் முன்னேறும் வழியையும் காட்டுகிறார். அதைப் பின்னால் காண்போம்.

இப்பொழுது, கனவு நிலையைச் சிறிது விவரமாக ஆராய்வோம். சாதாரணமாக நாம் விழித்திருக்கும்பொழுது கனவு நிலையைப்பற்றி ஆலோசிப்போமேயானால் கனவு உண்மையல்ல, ஒரு பொய்யான தோற்றம் என்று நினைக்கிறோம்.

கனவில் காணும் பொருள் ஓர் அசாதாரண நிலையை நினைவுபடுத்துகிறது. ரதங்கள், விமானங்கள், யானை போன்ற பெரிய மிருகங்கள், மற்றும் பல பட்டணங்கள் எல்லாம் நம்முள்ளேயே அடங்கி விடுகின்றன. வெளிப் பொருள்களைப் பல பேர் ஒரே சமயத்தில் காண முடியும். ஆனால், கனவையோ கனவு நிலையில் இருப்பவன் ஒருவன் மட்டும்தான் காண முடியும். கனவில் சில நண்பர்களையும் காண்கிறான் என்றாலும், விழிப்பு உலகில் அவர்களை விசாரித்தோமானால் அவர்கள் இவனைச் சந்தித்ததாகவே கூறமாட்டார்கள். ஏனெனில் இவன் கனவில் அவர்களைக் கண்டது அவர்களுக்குத் தெரியாதே!

மேலும், ஒரு சிறிது நேரத்தில் கனவு உலகில் பல வருஷத்திய (ஏன், பல நூற்றுண்டுகூட) சம்பவங்களைக் கடந்து செல்கிறோம். ஒரு சில நிமிஷங்களில் பல்லாயிரம் மைல் பிரயாணம் செய்து உலகத்தையே சுற்றி வந்துவிடுகிறோம். இவையெல்லாம் விழிப்பு நிலையில் உண்டாக முடியாத சம்பவங்கள்தாமே!

ஆனால், சற்று நிதானித்து ஆராய்ந்து நோக்கினால், கனவு நிலைக்கும் விழிப்பு நிலைக்கும் உள்ள வித்தியாசங்கள் மறைந்து இந்த இரண்டு நிலைகளையும் நன்றாக ஒப்பிட முடியும்; இவை ஒரே மாதிரியான அனுபவத்தைத்தான் குறிக்கின்றன என்றும் புலப்படும்.

காலத்தினால் எது கட்டுப்படுவதில்லையோ அதுதான் உண்மை. எந்தப் பொருளுக்கு ஆரம்பம் உண்டோ அதற்கு முடிவும் உண்டு. இந்த ரீதியில் பார்க்கும்பொழுது கனவு உலகில் காணப்படும் பொருள்களும் நிலையற்றன. விழிப்பு நிலையில் காணும் உலகப் பொருள்களும் நிலையற்றன. ஒரு நிலையில் காணப்படும் பொருளும் அனுபவமும் மற்றொரு நிலையில் காணப்படுவதுமில்லை, அனுபவிக்கப்படுவதுமில்லை. நன்றாக வயிறு நிறையச் சாப்பிட்டுவிட்டுக் கனவு காணும் ஒருவன் கனவில் பசியால் வாடுகிறான். மறுபடியும் சாப்பிடுகிறான், நீரும் அருந்துகிறான். ஆனால் கனவு ஆகாரமும் நீரும் விழிப்பு நிலையில் உதவா அல்லவா? அதே போல் விழித்திருக்கும் பொழுது உண்ட உணவும் குடித்த நீரும் கனவு உலகின் பசியையும் தாகத்தையும் தணிப்பதில்லை.

இரண்டு நிலைகளிலும் ஏற்படும் சம்பவங்களையும் தோற்றங்களையும் அந்த அந்த நிலைக்குத் தகுந்த அளவுகோலால் அளந்து பார்த்தால், முக்கியமாகக் கால வரம்பில் வித்தியாசம் காண முடியாது. இரண்டு நிலைகளிலும் உண்டாகும் சம்பவங்களும் தோற்றங்களும் ஒப்பிடத்தக்கவைதாம் என்று தெரியவரும்.

விழிப்பு நிலையில் பொருள்களை எப்படி அறிகிறோமென்றால், முதலில் புலன்களால் காணப்பட்ட அந்தப் பொருள்கள் மனதில் உணர்ச்சியின் பிரதிபிம்பமாக மாறி, அந்தப் பொருள்களை அறியப்படுத்துகின்றன. ஆதலால், சில சமயங்களில் விழிப்பு நிலையிலும் மனதில் தோன்றும் தோற்றங்களும் எண்ணங்களும் கனவு உலகத்தைப் போலவே பொய்யாகவும் கேலியாகவும் தோன்றுகின்றன. மனதில் மாயையின் உபாதியால் பதிந்திருக்கும் தோற்றங்களும் நினைவுகளும் ஆகிய இரண்டுமே மாறி மாறி உண்டாகி, உண்மை போன்று தோன்றுகின்றன. கனவு உலகம் தோன்றித் தோன்றி மறைவதைப் போல், விழிப்பு நிலையிலும் தோற்றங்களும் எண்ணங்களும் புலன்களுடன் பல பொருள்களின் சேர்க்கையால் மாறி மாறி உண்டாகின்றன, மறைகின்றன என்பதை நன்கு அறிபவனே ஞானி. ஃ

குழந்தையிடம் கொஞ்சம் அன்பைக் காட்டு. அது அன்பைக் கொள்ளை கொள்ளையாகத் திருப்பிக் காட்டும். —ரஸ்கின்

# துளசிதாசரின் உள்ளம்



## துளசிதாசரின் ஆன்மிக தாகம்

தமிழில் : எஸ். பி. ராஜகுமாரி

**ஹே** ஹரி, ஹே முராரே! நீ துக்கங்களை நசிக்கச் செய்பவன். அப்படி இருந்தும் துளசிதாசனுகிய என்னிடம் மட்டும் ஏன் கருணை காட்டாமல் இருக்கிருய்? மூன்று தாபங்கள், சந்தேகம், துயரம், பயம் ஆகியவற்றைப் போக்குபவனே! இந்தக் கலியுகப் பாவங்களினுல் என் அறிவு பேதைமை அடைந்துவிட்டிருக்கிறது.

பிரபுவே! நீயும் என்னைக் கவனிக்காவிட்டால் நான் எப்படி உயிர்வாழ முடியும்?

பிரபுவே! நீ எல்லா வகையிலும் சாமர்த்தியசாலி. நானே எல்லா வகையிலும் பலம் அற்றவனே. இதை அறிந்திருந்தும் உன் மனம் என் மீது உருகவில்லை என்ருல் நான் ஓர் அபாக்கியசாலியே.

ஹே ரகுபதி! நான் பல கர்ப்பப் பைகளில் சுற்றிக்கொண்டிருக்கிறேன், அதாவது பிறப்பதும் இறப்பதுமாக இருந்து கொண்டிருக்கிறேன். உன்னைத் தவிர வேறு சுவாமியும் எனக்கு இல்லை. எனவே நான் சுகதுக்கங்களைச் சகித்துக்கொண்டு எப்போதும் உன்னிடமே சரணடைந்திருக்கிறேன். உன்னைப் போன்ற தயாளகுணம் கொண்ட கடவுளும் வேறு இல்லை என்பதை என் மனம் நன்கு அறிந்திருக்கிறது. ஆயினும் இந்தத் துளசிதாசனிடம் நீ சந்தோஷப்படும்படியான பொருள் எதுவுமில்லை. (எந்தச் சாதனமும் இல்லாவிட்டாலும் சரணடைந்த ஒன்றினுலேயே நீ மகிழ்ச்சி அடைய வேண்டும்.)

* * * *

**ஹே** கேசவா! ஹே சுவாமி! எந்தக் காரணத்தினுல் என்னைத் துஷ்டனுகப் பாவித்து, என்னை நன்கு அறிந்திருந்தும் பராமுகமாக இருக்கிருய்? புனிதமான களங்கமற்ற மனம் படைத்த சாதுக்களே உன்னுடையவர்கள் என்று நீ சொல்வாயானுல் பிராம்மணன் (அஜாமிளன்), வேடன் (வால்மீகி), தாசி (பிங்களா) ஆகியோரை மட்டும் ஏன் கரையேற்றினுய்? அவர்களுடன் மட்டும் உனக்கு ஏதேனும் தனிப்பட்ட உறவு இருந்ததோ?

ஹே ஹரி! என்னுடைய இந்த ஜீவனின் வாழ்நாள், கர்மம், நற்கதி (சொர்க்கம் போவது), துர்க்கதி (நரகம் போவது) ஆகியவை அனைத்தும் உன் கையில்தான் இருக்கின்றன.

பிரபுவே! என் மமதையை அழித்து உன்னை மறந்து திரியாமல் இருக்க ஏதேனும் வழி செய்வாயாக.

பிரபுவே! நீ என்னைக் கைவிட்டுவிட்டாலும் நான் வேறு யாரையும் பூஜிக்க மாட்டேன். இதுவே என் உயிர்ப்பிரமாணம் ஆகும்.

ரகுவீரா! நீ என்னைச் சொர்க்கத்திற்கு அனுப்பினுலும் சரி, நரகத்திற்கு அனுப்பினுலும் சரி. எங்கிருந்தாலும் மனம், வாக்குச் செயலால் உன்னையே பிரார்த்திப்பேன்.

தலைவனே! இவ்விதம் உன்னிடம் அதிகப் பிரசங்கித்தனமாகப் பேசிக்கொண்டிருப்பது சரியன்று, தவறுதான். என்ருலும் என்மீது கருணை கொள்ளாத உன் இரக்கமற்ற தன்மையைக் கண்டு இரவும் பகலும் நான் துன்பப்படுகிறேன். (ஆகவேதான் மனம் தளர்ந்து இவ்விதம் சொல்ல நேர்ந்தது.)

* * * *

**மா**தவா! ஏன் என்மீது இன்னும் கருணை காட்டாமலிருக்கிருய்? சரண் புகுந்தவர்களைக் காப்பாற்றுவதே உன் லட்சியம். உன் தாமரைத் திருவடிகளைப் பார்த்துப் பார்த்து வாழ்வதே என் லட்சியம். நான் ஏழையாகி நீ தயாளனுகவும், நான் அடிமையாகி நீ என் தலைவனுகவும் ஆகாதவரையில் நான் பட்ட கஷ்டங்களை உன்னிடம் சொல்ல

வில்லை; பொறுத்துக்கொண்டிருந்தேன். ஆயினும் நீ எல்லாவற்றையும் அறிந்துதான் இருந்தாய். வேதங்கள் உன்னைத் தாராள குணமுடையவன், புனிதமானவன் என்றும் என்னைக் கஞ்சன், அற்பன் என்றும் கூறு கின்றன.

ரகுநாதா! உனக்கும் எனக்கும் பல உற வுகள் ஏற்பட்டு விட்டிருக்கின்றன. தற் சமயம் நீ என்னைக் கைவிட்டால் காரியம் ஒன்றும் நடக்காது. நீயே என் தாய், தந்தை, குரு, சகோதரன், நண்பன், தலைவன்; மற்றும் எல்லா வகையிலும் என்னைக் காப்



பவன் நீயே. எனவே அஞ்ஞானம் என்ற இருளில் நான் விழாமல் இருக்க ஏதேனும் ஒரு வழியை யோசிப்பாயாக.

தாமரைக்கண்ணு! உனது எல்லையற்ற கருணை உலகிலுள்ள பெரும் பயத்தைப் போக்க வல்லது.

பிரபுவே! உன் ஒளி இல்லாமல் சந்தேகம் என்ற என் இருள் நீங்காது, நீக்கவும் முடி யாது.

* * * *

தலைவனே! உன்னைப் போன்று என்னைக் காப்பவர் வேறு யாராவது இருந்தால் அழுது

---

குடம், நீர், அதில் தோன்றும் சூரிய பிம்பம் இவையனைத்தையும் விட்டு, சம நிலையிலுள்ளவன், 'இம் மூன்றையும் பிரகா சிப்பவன் சூரியன்' என்று எங்ஙனம் நன் ருய்க் காண்கிருனே அங்ஙனமே அறி வாளியால் ஸ்வயம் பிரகாசமான ஆத்மா காணப்படுகிறது. —விவேகசூடாமணி-219

---

அழுது என் துன்பங்களை மீண்டும் மீண்டும் உன்னிடமே ஏன் சொல்லப்போகிறேன்? உன்னைத் தவிர ஏழைகளிடம் அன்பு கொண்டவர் யார்? உன்னைத் தவிர வேறு யாருக்குப் பதிதபாவனன் என்ற பெயர் இருக்கிறது? மகாபாவியான அஜாமிளனுக்கு உன்னைத் தவிர வைகுண்டபதம் அளித்தது யார்?

சிவன், பிரம்மா, இந்திரன் முதலான உலகக் காப்பாளர்கள் இருந்தபோதிலும், பயம் என்ற நதியில் மூழ்கிய கஜேந்திர னுக்கு யாருமே உதவவில்லை. நீதான் விரைந்து சென்று காப்பாற்றினுய்.

சபையில் அநேக அரசர்கள் இருந்தும் திரௌபதி 'பிரபோ, என்னைக் காப்பாற்று!' என்று கூறியபோது யாரும் அவளுக்கு வஸ் திரம் அளிக்கவில்லை. நீதான் புடைவையை அளித்துக்கொண்டிருந்தாய்.

கருணைக்கடலே! உனது கருணை மிகுந்த புகழை என் ஒரு வாயால் எப்படிச் சொல்ல முடியும்?

கோசலநாதனே! அவதாரம் எடுத்துப் பக்தர்களுக்காக நீ எதைத்தான் செய்ய வில்லை?

என்னைப் பாவி என்று நீ ஒதுக்குவதாக இருந்தால் உன்னைப் போன்ற ஒருவரிடம் என்னை ஒப்படைத்துவிடு. இல்லையென்ருல் நான் உன் திருவடிகளை விடுத்து வேறு எங்கே எவ்விதம் போக முடியும்?

(தொடரும்)



# செய்திகள்

ஃ சண்டிகர், ஸ்ரீராமகிருஷ்ண மடம் சமீபத்தில் ஸ்ரீராமகிருஷ்ண—விவேகானந்த இளைஞர் மாநாடு நடத்தியது. இதில் 172 இளைஞர்கள் பங்கு கொண்டனர்.

ஃ புருளியா, ஸ்ரீராமகிருஷ்ண மிஷன் வித்யாபீடம் சமீபத்தில் நடத்திய ஸ்ரீராமகிருஷ்ண—விவேகானந்த இளைஞர் மாநாட்டில் 250 இளைஞர்கள் பங்கு கொண்டு பயன் பெற்றனர்.

ஃ ஒரிஸ்ஸா, புரி மாவட்டத்தில் நடந்து கொண்டிருக்கும் வெள்ள நிவாரணப் பணியின் ஒரு பகுதியாக 1740 போர்வைகள், 1000 டவல்கள், 1200 வேட்டிகள், 2100 புடைவைகள், 5954 பெண்களுக்கான உடைகள், 2955 மீட்டர் போர்வை போன்ற துணி ஆகியவை 6,454 குடும்பங்கள் அடங்கிய 128 கிராமங்களில் புரி ஸ்ரீராமகிருஷ்ண மிஷன் கிளை விநியோகித்தது.

ஃ குஜராத் புயல் நிவாரணப் பணிகளை ஸ்ரீராமகிருஷ்ண மிஷன் மேற்கொண்டு நடத்தி வருகிறது. பாஜ்ரா உணவு தானியம் 2,500 கிலோ, கோதுமை 1100 கிலோ, அரிசி 3500 கிலோ, கடலைப்பருப்பு 3400 கிலோ, சர்க்கரை 580 கிலோ, தேயிலை 345 கிலோ, வெல்லம் 66 கிலோ, ஸ்வீட்ஸ் 66 கிலோ, பிஸ்கட் 15 கிலோ, பிளாஸ்டிக் டம்ளர்கள் 440, அலுமினியத் தட்டுகள் 1279, அலுமினியக் கரண்டிகள் 890, சொம்பு (Tapelis) 780, கப் & ஸாசர் 369 செட்டுகள், அலுமினிய டம்ளர்கள் 110, தண்ணீர்ப் பாத்திரம் 110, புடைவை 780, ஆண்களுக்கான மேல் துண்டு 890, தாய்மார்களுக்கு உரிய ஜாக்கட் 800, லாங் க்ளாத் 1687 மீட்டர், குழந்தைகளுக்கான துணி 250, ஜமக்காளம் 690, மண்ணெண்ணை ஸ்டவ் 84, ஆயில் எஞ்சின் & பம்பு செட் 1 ஆகியவை சமீபத்தில் விநியோகிக்கப் பெற்றன.

ஃ பேலூர் மடம், சாரதா பீடத்தில் டிசம்பர் 25 முதல் 30 தேதி வரை 6 நாட்களுக்கு ஸ்ரீராமகிருஷ்ண—விவேகானந்த இளைஞர் மாநாடு நடைபெற்றது. இதில் இந்தியாவின் பல பாகங்களிலிருந்தும் வந்திருந்த 700 இளைஞர்கள் கலந்துகொண்டனர்.

ஃ ஒரிஸ்ஸா, புரி மாவட்டத்தில் ஸ்ரீராமகிருஷ்ண மிஷன் நடத்தி வந்த நிவாரணப் பணிகள் முடிவடைந்தன. இந்த நிவாரணப் பணியின்போது 132 கிராமங்களைச் சேர்ந்த 6554 குடும்பத்தினர் பயன் பெற்றனர். அதன் இறுதி கட்டத்தில் 1870 ஜமக்காளம், 1000 டவல்கள், 1300 வேட்டிகள், 2200 புடைவைகள், ஆண்களுக்கும் பெண்களுக்கும் உரிய சட்டை, ஜாக்கட் போன்ற துணிகள் 6029, பெட்ஷீட் போன்ற துணி 2955 மீட்டர் ஆகியவை விநியோகிக்கப்பட்டன.

அவல் 380 கிலோ, பால் பௌடர் 375 கிலோ, வெல்லம் 100 கிலோ, சர்க்கரை 400 கிலோ, விறகு 1300 கிலோ ஆகியவற்றைக் கொண்டு பாயசம் சமைத்துப் பிரதி தினமும் 25,200 பேர்களுக்கு நிவாரணப் பணிகள் நடைபெற்ற கடைசி 26 நாட்களுக்கு வழங்கப் பட்டது.

ஃ புருளியா, ஸ்ரீராமகிருஷ்ண மிஷன் துவக்கிய பஞ்ச நிவாரணப் பணியின் ஒரு பகுதியாக 5 கிராமங்களில் 617

குடும்பத்தினரிடையே 2056 பழைய துணிகள் விநியோகிக்கப்பெற்றன.

ஃ மதுரை, நாராயணபுரத்திலுள்ள ஸ்ரீ ராமகிருஷ்ண சேவா சங்கத்தில் டிசம்பர் 18-ஆம் நாள் மாலை ஸ்ரீ சாரதாதேவி ஜயந்தி பொதுவிழா நடைபெற்றது. சுவாமி கமலாத்மானந்தர் ஸ்ரீசாரதா தேவியாரைக் குறித்து உரையாற்றினர்.

ஃ மதுரை, அருள்துணை மாதர் சங்கத்தில் டிசம்பர் 19-ஆம் தேதி சுவாமி கமலாத்மானந்தர் ஒரு நாள் அந்தர் யோகம் நடத்தினர்.

ஃ கோயம்புத்தூர், பெரியநாயக்கன்பாளையம் ஸ்ரீராமகிருஷ்ண மிஷன் வித்யாலயாவில் ஜனவரி 2 ஆம் நாள் ஞாயிற்றுக்கிழமை ஸ்ரீராமகிருஷ்ண ஜயந்தி பெரிய அளவில் விமரிசையாகக் கொண்டாடப்பெற்றது. சுமார் 20,000 மக்கள் கலந்துகொண்டனர்.

ஃ மதுரை, கீதா பவனத்தில் டிசம்பர் 19-ஆம் நாள் இரவு 7 மணிக்கு, 'பகவத் கீதையில் கர்மயோகம்' என்ற தலைப்பில் சுவாமி கமலாத்மானந்தரின் சிறப்புச் சொற்பொழிவு நடைபெற்றது.

ஃ மதுரை, காந்தி நகரிலுள்ள ஸ்ரீராமகிருஷ்ண தபோவனத்தில் டிசம்பர் 20 மாலை 'ஸ்ரீராமகிருஷ்ணரின் உபதேசம்' என்ற தலைப்பில் சுவாமி கமலாத்மானந்தர் உரை நிகழ்த்தினர்.

ஃ மதுரை, திருவள்ளுவர் கழகத்தில், டிசம்பர் 20-ஆம் நாள் இரவு 7 மணிக்கு 'ஹிந்துப் பெண்களும் ஆன்மிகமும்' குறித்து, சுவாமி கமலாத்மானந்தர் உரையாற்றினர்.

ஃ ஸ்ரீவில்லிபுத்தூர், ஸ்ரீராமகிருஷ்ண—விவேகானந்த மன்றத்தின் சார்பாக ஸ்ரீ ராமகிருஷ்ண ஜயந்தி விழா பெனிங்டன் கலையரங்கில் மூன்று நாள் சிறப்பாகக் கொண்டாடப்பெற்றது. டிசம்பர் 21, 22, 23 ஆகிய தேதிகளில் இரவு 7 மணிக்கு முறையே ஸ்ரீராமகிருஷ்ணர், ஸ்ரீ சாரதா தேவியார், சுவாமி விவேகானந்தர் பற்றி சுவாமி கமலாத்மானந்தர் சிறப்புரை நிகழ்த்தினர்.

ஃ கும்பகோணம், ஸ்ரீராமகிருஷ்ண—விவேகானந்த மன்றம் டிசம்பர் 25-ஆம் நாள் ஸ்ரீசாரதாதேவி ஜயந்தி விழாவை, கோபாலராவ் நூலக மாடியில் கொண்டாடியது. அன்று காலை 10-30 மணிக்கு, 'பக்தி-ஜபம்-தியானம்' என்ற தலைப்பில் சுவாமி கமலாத்மானந்தரின் சொற்பொழிவும் 'ஆன்மிக வினு-விடை' வகுப்பும் நடைபெற்றன. அங்கு அன்று மாலை நடைபெற்ற பொதுக்கூட்டத்தில் 'விவேகானந்தரும் ஹிந்து மறுமலர்ச்சியும்' குறித்து சுவாமி கமலாத்மானந்தர் உரை நிகழ்த்தினர்.

ஃ மணல்மேடு, ஸ்ரீராமகிருஷ்ண தொண்டர் சங்கம் டிசம்பர் 26-ஆம் நாள் ஸ்ரீசாரதாதேவி ஜயந்தி பொது விழாவைக் கொண்டாடியது. சுவாமி கமலாத்மானந்தர் 'மனித வாழ்க்கையில் ஆன்மிகம்' என்ற தலைப்பில் சிறப்புச் சொற்பொழிவு நிகழ்த்தினர்.

ஃ திருமேனியார் கோவில், திருமூலநாத சுவாமி சிவன் கோவிலில் டிசம்பர் 27 காலை சுவாமி கமலாத்மானந்தரின் சமயச் சொற்பொழிவு நடைபெற்றது.

ஃ ஸ்ரீராமகிருஷ்ண தொண்டர் சங்கத்தின் சார்பாக மயிலாடுதுறை, ஸ்ரீராமானுஜ கூடத்தில் டிசம்பர் 27-ஆம் நாள் இரவு 7 மணிக்கு ஸ்ரீசாரதாதேவி ஜயந்தி கொண்டாடப்பெற்றது. சுவாமி கமலாத்மானந்தர் உரையாற்றினர்.



# ஆன்மிக உரையாடல்

சுவாமி துரியானந்தர்

**சுவாமி துரியானந்தர் :** பொற்காலம் பிறந்தாக வேண்டும் என்ற கொள்கை, ஒருபோதும் நிறைவேறாததாக இருந்தாலும் கூட மிகவும் போற்றத் தகுந்த ஒரு கொள்கையாகும். 'ஆண்கள் எப்போது தமது இயற்கையில் பெண்களைப் போல் ஆகிறார்களோ, அப்போதுதான் பொற்காலம் தோன்றுவது சாத்தியமாகும்' என்று கவி சுரேந்திரநாத் மஜூம்தார் சொல்கிறார். அவர் மிகச் சிறந்த கவிஞர். உங்களுக்கு இந்த வரிகள் சிரிப்பாக இருக்கலாம். ஆனால் நான் என் பாலப் பருவத்தில் இவற்றைப் படித்தபோது சிரிக்கவேயில்லை.

கூடியிருந்தோரில் ஒருவர், ''மேற்படி வாசகம் பெண்களின் மென்மையான உணர்வுகளை மட்டும் கருத்தில் கொண்டதே யன்றி, பெண்மையின் மற்ற இயல்புகளை (நொய்ம்மையை) அல்ல'' என்று கூறினர்.

**சுவாமி துரியானந்தர் :** ஆம், அதுதான் கருத்து. 'மனிதன் பாரம் இழுக்கிற மிருகமன்றி வேறில்லை; இப்படிப்பட்டவன் தன்னைப்பற்றிய கர்வத்தில் உப்புவது எத்தனை அபத்தம்!' என்கிறார் கவி. மாந்தர் வெறும் அடிமை வேலை செய்பவர்கள்தாம்—குடும்பச் சுமைக்குத் தோள் கொடுப்பதிலேயே அவர்களுடைய வாழ்வு கழிகிறது; இத்தகையவர்கள் பெண்களின் நளின கௌரவத்தை வெளிப்படுத்துவது எளிதல்ல—இதுதான் கவி கூறுவதன் அர்த்தம்.

**ஓர் அன்பர் :** ஐயா, பெண்கள் நரகத்துக்கே இட்டுச் செல்பவர்கள் என்பது போலெல்லாம் யாவரும் சொல்கின்றனர். ஆனால் பெண்கள் நூல்களை எழுதியிருந்தால் அவர்கள் ஆண்களை இதே சாயத்தில் தான் தீட்டியிருப்பார்கள். ஆண்கள் நரகத்திற்கே அழைத்துச் செல்பவர்கள் என்று எழுதியிருப்பார்கள்.

**சுவாமி துரியானந்தர் :** அவர்கள் இப்படிச் செய்ய ஆரம்பித்துவிட்டார்கள்! மேல்நாடுகளில் அவர்கள் எப்படிப் பதிலுக்குப் பதிலடி கொடுக்கிறார்கள் என்பது உங்களுக்குத் தெரியாது? சாஸ்திரங்கள் பெண்கள் அனைவரையும் ஒட்டுமொத்தமாகத் தூஷிக்கவில்லை. அவை உத்தம ஸ்திரீகளுக்கும் அதம ஸ்திரீகளுக்குமிடையே பாகுபாடு செய்திருக்கின்றன. ஸ்ரீராமகிருஷ்ணரும் இதே ரீதியில் சொல்வது வழக்கம். புருஷனைப் புலனின்பத்திலேயே இழுக்கும் ஸ்திரீ நீசமானவள்; புருஷனை இறைவனிடம் திருப்பி விடுவதில் உதவி செய்பவள் உயர்ந்த வகையைச் சேர்ந்தவள். சாஸ்திரங்களின் கண்டனங்கள் முதல் வகையைச் சேர்ந்த அதமப் பெண்டிரைக் குறித்தனவே. இன்னொருவரை, இந்திரிய சுகத்தின் பக்கமாக இழுப்பவரை, நீங்கள் எவருமே போற்றுவதில்லை என்பது நிச்சயம். எனவே சாஸ்திரங்கள் இப்படிப்பட்ட பெண்டிரிடமிருந்தும், இவர்களோடு கூட்டுச் சேர்ந்திருப்பவர்களிடமிருந்துகூட ஆத்ம சாதகர்கள் விலகியிருக்க வேண்டும் என்று உபதேசிக்கின்றன. சங்கத்துக்கு உள்ள பெரும் செல்வாக்கை நீங்கள் பார்த்ததில்லையா? நாங்கள் பள்ளியில் படித்தபோது சில பையன்கள் வீட்டுக்குத் திரும்பும்போது அபினி புகைக்கும் ஒரு கோஷ்டியின் விடுதிக்குப் போய்க் குடிகாரர்களைப் போலத் தங்களைக் காட்டிக்கொள்ள முயல்வார்கள். அபினி புகைப்பவர்களுக்குக் குடிகாரர்களைக் கண்டால் கிலி என்று உங்களுக்குத் தெரிந்திருக்கும். ஆனாலும் இப்படிச் செய்ததில் அந்தப் பையன்களில் ஒருவனே தீவிர அபினிப் புகைப்பாளியாக மாறிவிட்டான்! சங்க சக்தியின் பயங்கர விளைவுகளைப் பாருங்கள்!

மனப்போக்குகள் மாத்திரம் ஒரு முறை உருவாகிவிட்டால் பிறகு அவற்றைப் பறித்து எறிவது மிகவும் சிரமமாகும். சில சமயத்தில் அவை தூக்கத்தில் நடப்பவர்

வேறு எதையும் எண்ணுமல் எவன் எப்போதும் என்னையே வழிபடுகிருனே அவனது யோக க்ஷேமத்தைப் பற்றிய பொறுப்பை நானே ஏற்றுக்கொள்கிறேன். —கீதை

களிடம் செயற்படும். ஸோம்னும்புலிஸம் (Somnambulism) என்ற ஆழ்ந்த உறக்க நிலையில் இருக்கும் ஒருவனிடம்கூட அவை வேலை செய்கின்றன. இந்த நிலையின் ஆச்சரியமான காரியங்களை ஒரு முறை சுவாமிஜி (விவேகானந்தர்) விவரித்தார். மேல்நாட்டு மாது ஒருத்தி, தூக்க நிலையிலேயே கல்லறைகளைத் திறந்து, பொருள்களை எடுத்துக்கொண்டு சென்று, தன் படுக்கைக்குக் கீழே வைத்துக்கொண்டு விடுவதுண்டு என்று உதாரணம் காட்டினுர். விழித்தெழுந்தபோது அவளுக்கு இவற்றில் எதுவும் நினைவு இராதாம். ஆறு ஆவன்னுகூடத் தெரியாத ஒரு பெண் தூக்கத்தில் அருமையாகச் சொற்பொழிவு செய்வாளாம். இப்படி நம் தேசத்தில் நடந்தால், கெட்ட ஆவிகளின் சேஷ்டை என்றே நினைக்கப்பட்டிருக்கும். ஆனுல் இது நடந்தது மேல்நாட்டில்; எனவே, அவர்கள் ஆராய்ச்சி செய்ய ஆரம்பித்தனர். முடிவாக, அந்தப் பெண் பத்துப் பன்னிரண்டு ஆண்டுகளுக்கு முன்பு, சொற்பொழிவு நிகழ்த்துவதையும் வாய்விட்டுப் படிப்பதையும் வழக்கமாகக் கொண்ட ஒரு விஞ்ஞானியின் வீட்டில் வேலைக்காரியாக இருந்தவள் என்று கண்டு பிடித்தனர். இதிலேயே காரண காரிய — விளைவுக்கு உள்ள தொடர்பை அவர்கள் கண்டுகொண்டனர்.

நன்னடத்தையும் படிப்பும் அறிவும் கொண்ட ஓர் இளைஞன் கல்கத்தாவில் கெட்ட பெயர் கொண்ட மாதரைச் சீர் திருத்துவதில் ஈடுபட்டான். ஒரு பெண் அவனிடம் தன் துயரக் கதையைச் சொன்னுள். அது அவனுடைய நெஞ்சைத் தொட்டுவிட்டது. பிறகு அவன் அவளிடம் பிரிக்கமுடியாத பற்றுக் கொண்டுவிட்டான். இம்மாதிரி விஷயங்களில் எவரும் மிகவும் துணிச்சலாகப் போகக்கூடாது. ஏனெனில், இது போன்றவற்றில் எப்போதுமே ஆபத்துக்கான வாய்ப்பு இருக்கிறது.

வெகு ஆச்சரியமான இன்னெரு சம்பவம் எனக்குத் தெரியும். இது புத்தகத்தில் படித்துத் தெரிந்துகொண்ட சமாசாரமல்ல. நானே நேரே சாட்சியாகப் பார்த்த விஷயம். பட்டதாரியான ஒரு வங்காளி சாது சிறந்த துறவு உள்ளவர். அவர் சுவாமிஜியுடன் சக மாணவராக இருந்தவர். சுவாமிஜியின் மூலம்தான் இவரை நாங்கள் அறிந்தோம். தாம் புலன்களை வென்ற தீரர் என்பதில் அவர் பெருமையடித்துக் கொள்வார். தொழு நோயாளிகளுக்காகவும் வேறு துர்வியாதிஸ்தர்களுக்காகவும் அவர் பணம் யாசகம் செய்து அவர்களுக்குச் சேவை செய்து வருவது வழக்கம். அவர் எங்களிடம், 'உங்களில் சுவாமிஜி ஒருவருக்கு மாத்திரம்தான் அறிவு விசேஷம் இருக்கிறது. மற்ற நீங்கள் எல்லோரும் சந்நியாசிகளாக இருக்கலாம்; ஆனுல் உங்களில் எவருக்கும் அறிவுச் சிறப்பு இல்லை' என்று சொல்வது வழக்கம். சாஸ்திரங்களின் பிரமாணத்தில் அவருக்கு நம்பிக்கை கிடையாது. 'நாமுங்கூட நூல்கள் எழுதினுல் அவையும் நல்ல சாஸ்திரங்களே ஆகும்' என்பார். வாதம் செய்வதில் மிக்க ருசி கண்டவர். அவரது துணிச்சலும் விசேஷமாகக் குறிப்பிடத்தக்கது. மக்கள் அவரை மிகவும் பெரிதுபடுத்திக் கொண்டாடினுர்கள். அதற்கு அவர் தகுதியும் பெற்றிருந்தார். ஒரு சமயம் நான் அவரை அலகாபாத்தில் பார்க்கும்படியாக ஏற்பட்டது. அண்மையில் தாம் நடத்தையில் விழுந்து விட்டதாக அவர் ஒளிக்காமல் என்னிடம் கூறினுர். முதிர்ந்த வயதில் அவர் சபலத்துக்கு அடிபணிந்துவிட்டதற்காக நான் அவரைக் கண்டித்தேன். பிறகு அவர் எல்லா விவரத்தையும் வெளியிட்டார். சபலம் தம்மைத் தொட முடியாது என்ற உறுதியான எண்ணத்தில் தாம் இருந்ததனுலேயே ஒரு கெட்ட ஸ்திரீயினுல் முட்டாளாக்கப்பட்டதைக் கூறினுர். பெருமிதமே அவரைச் சிறுமைப்படுத்தி விட்டது. இம்மாதிரி விஷயங்களில் ஒருவர் ஒருபோதும் துணிச்சல் காட்டக்கூடாது. எனவேதான் அவர்களை (அதம மாதரை)க் குறித்துச் சாஸ்திரங்களில் தெளிவான குரலில் எச்சரிக்கை தரப்பட்டிருக்கிறது. ஃ

## காந்தியடிகளின் பொன்மொழிகள்

- தீமை வேறு, தீமை செய்பவன் வேறு என்ற பாகுபாட்டைச் சத்தியாகிரகி ஒருபோதும் மறக்கக்கூடாது. தீமை செய்பவன் மீது அவனுக்கு வெறுப்போ மனக் கசப்போ இருக்கக்கூடாது.
- எப்படிப் பிரார்த்தனை செய்ய வேண்டும் என்று கவலைப்பட வேண்டாம். எந்த உருவில் வேண்டுமானாலும் அது இருக்கட்டும்; உங்களை இறைவனுடன் பிணைக்கும் விதத்தில் அது இருக்க வேண்டும், அவ்வளவுதான்.
- சத்தியத்தை நாடுகிறவர் கைக்கொள்ள வேண்டிய ஆன்மிகக் கட்டுத் திட்டங்களில் மௌனமும் ஒரு பகுதி என்பதை அனுபவம் எனக்குப் போதித்திருக்கிறது. உண்மையை அறிந்தோ அறியாமலோ மிகைப்படுத்தியும் மறைத்தும் திரித்தும் கூறுவது மனிதனுக்கு இயற்கையாகவே இருக்கும் ஒரு குறைபாடு. அதனின்றும் தப்புவதற்கு மௌனம் அவசியமாகிறது. அதிகமாகப் பேசாதவர் யோசியாமல் பேச வாய்ப்பு இருக்காது.